# ஊழியன்

## மலர் 14, இதழ் 2

## July 13, 1934

Record no. 148

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கச. சென்னை, பவ௵ ஆனி௴ 29௳, வெள்ளி (13-7-1934) இதழ் உ

*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடிலாது*

*சொந்தவர சேபுரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*

*இந்தநிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*

*நந்தலிலா ஊழியமே நான் கொண்டேன்*
*நல்லனவெந் நாளும் வாழ்க!*

## மீண்டும் விரதம்.

காந்தி யடிகள் இம்முதுமைப் பருவத்தில் அடிக்கடி விரதமிருக்கும்படி நேர்வது ஆற்ற முடியாத வருத்தந் தருவதாகும். ஆகஸ்ட் ஏழாம் நாள் தொட்டு ஒருவாரம் உண்ணா விரதம் இருக்கப்போவதாக அடிகள் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். இவ்விரதத்திற்குக் காரணம் அஜ்மீரில் சநாதனிகள் தலைவர் அடிபட்டதாகும். அடிகள் ஒரு முடிவுகட்டி விட்டால் அதை மாற்ற யாராலும் ஆவதில்லை யென்பது உலகறிந்தது. அடிகள் உள்ளத்தை, விரதமெடுக்கும் முடிவுக்கு வருமாறு தூண்டும் நிகழ்ச்சிகள் நடவாமல் பார்த்துக்கொள்ள வேண்டுவது, அவர் வழி யொழுகும் அன்பர்கட்கு இன்றியமையாக் கடன்.

அடிகள் நீண்ட நாளைச் சுற்றுப் பிரயாணம் காரணமாக வலியிழந்த உடலை, மேலும் வருத்தும்படி நேர்வதற்கு யாரை நோவது? அவர் மற்றையோர் குற்றத்தையெல்லாம் தம்மீது போட்டுக்கொள்ளும் இயல்பினர். பிறர் பட்ட துன்பத்திற்குப் பரிகாரமாகத் தம் உடலை வருத்த வேண்டும் என அவர் கருதுகிறார், இன்னோரன்ன நிகழ்ச்சிகளுக்கெல்லாம் பட்டினி கிடந்து கிடந்து, தள்ளாத கிழ உடலை வாட்டி, நாட்டு மக்களைப் பெருங் கவலைக்கு அடிக்கடி ஆளாக்குகின்றார் காந்தியடிகள் என்பது உண்மையானாலும் அவரை நோவதிற் பயனில்லை. அவர் இவ்வுலகில் இன்னும் பன்னாள் வாழவேண்டும் என்ற கவலை கொண்டவர் அவர் மெய்யடியார்களேயாகலின், அவர் வாழ்விற்குக் குறைபாடு வரத்தக்க காரியம் எதையும் செய்யாதிருக்க வேண்டுவது, அடிகள் வாழ்வை விரும்புவோர் பெருங் கடமையல்லவா?

மற்றையோர் செயலால் பட்டினி கிடப்பது ஒருபுற மிருக்க, அடிகள் வழி யொழுகுவோர் காரணமாகவே பட்டினி கிடக்க நேர்தல் என்ற ஒன்றைக் காந்தியடிகள் வாழ்வில் இனி இல்லாமற் செய்தல்வேண்டும். எதிரிகளைக் காப்பதற்கு இதைவிடச் சிறந்த முறையை எந்தப் பெரியாரும் கையாள முடியாது. அத்துணைப் பெரிய காரியத்தைக் காந்தி யடிகள் இப்பட்டினி மூலம் செய்யத் தீர்மானித்து விட்டார். அவர்கள் என்ன அட்டகாசம் செய்தாலும் விட்டுவிட வேண்டும் என்னும் கருத்து அடிகள் அறிக்கையை அழகு செய்து நிற்கின்றது. தம்முடைக் கூட்டத்தில் வந்து வீண் கலகம் செய்தவர் அடிபட்டதற்காகத் தாம் உண்ணாவிரத மிருப்பது என்ற ஒன்று அளவிட முடியாத பெருந் தன்மையின்பாற் பட்டதல்லவா?

இதனைச் சநாதனிகள் என்போர் அறிகின்றார்களா? இந்தப் பெருங் கருணையை உளம் பொருந்த உணரும் ஆற்றல் அவர்கட்கு உண்டா? எத்தனையோ பெரிய பெரிய ஆச்சாரியர்கள், மடாதிபதிகள், மகந்துக்கள், தம்பிரான்கள், பீதாம்பர தாரிகள், யானை குதிரை ஒட்டை எடுபிடி சகிதம் பல்லக்கிலேறித் திருவீதி பவனி வருவோர், ஆகிய சநாதன தர்மத்தை நிலைநாட்டப் பிறந்தருளிய அவதார மூர்த்திகள் இந்த நாட்டில் பலர் இருக்கின்றார்களே! அவர்களிற் பல்லோர் காந்தி யடிகளை எதிர்த்தும் வருகின்றார்களே! அவர்களில் யாராவது காந்தி யடிகளின் இச்செயற்கருஞ் செயலை எண்ணிப் பார்க்கவாவது தகுதி பெற்றிருக்கின்றனரா எனக் கடவுளைத்தான் கேட்கவேண்டும்.

காந்தி யடிகளை வீணாக எதிர்க்கும் சநாதனிகள் என்போர், அடிகளின் மாசிலா உள்ளத்தை-எதிரி

கட்கும் இரங்கும் கருணையை— தம்கட்சிச் சார்பாக மறு கட்சியினர்க் கிழைக்கப்பட்ட தீங்கு காரணமாக ஒருவாரப் பட்டினியேற்றுத் தம் கணக்கிட முடியாத மதிப்புயர்ந்த உடலை வருத்தும் பெருஞ் செயலை, நினைந்து உள்ளூர உணர்ந்து மெய்யறிவு பெறுவரா?

காந்தி யடிகள்மீது வெடிக்குண்டு வீசப்பட்டது. அது செய்தோர் சநாதனிகளாகத் தான் இருக்கவேண்டும் என்பது மிகப் பலர் கருத்து. அதற்காகச் சநாதனிகளுள் எந்தத் தலைவராவது ஒரு நாளாவது பட்டினி கிடந்தாரா? "அது சநாதனிகள் செய்ததுதான் என்பதற்குச் சாட்சி எங்கே" என்று கேட்கின்றனர் சில சநாதனிகள். உண்மையில் எந்தச் சம்பந்தமும் இல்லாத வழியிற் போகும் ஒருவனு குண்டை வீசுவான்? சாட்சிகள்—மற்றவை எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். இத்தகைய நிகழ்ச்சி நடக்குங்கால் எதிர்க்கட்சிக்காரர் தலை வணங்க வேண்டுவதுதான் நேர்மை. அதனைச் சநாதனிகளிடம் கூறி என் பயன்?

எல்லோரும் காந்தியைப்போல் ஆகி விட்டால் பிறகு காந்திக்குத்தான் இவ்வளவு மதிப்பு எங்கிருந்துவரும்? காந்தி யடிகள் செயல் ஒரு தனிச் செயலே. அதனை மற்றையோரிடம் காண்பதெப்படி? அடிகளின் இவ்விரதத்திற்குக் காரணமாயினர் மிகவும் வருந்துவ ரென்பது உறுதி. இனிக் கண்டிப்பாக இன்ன நிகழ்ச்சி ஒன்றும் நடவாமல் காக்க வேண்டுவது தொண்டர்கள்—அவர் தலைவர்கள் கடன். இன்னோரன்னவற்றை மனங்கொண்டு தங்கள் அட்டகாசங்களைப் பெருக்கிக் கொள்ளாமல் அடக்கமாக இருக்க முயல வேண்டுவது சநாதனிகட்கு ஒழுங்காகும். அடிகள் விரதம் இனிது முடிய இறையருள் வதாக! காந்தியடிகள் பன்னெடு நாள் வாழ்க?

மேலவனே! மேதினியை மெய்யன்பால்
ஆண்டுபுகழ் மேவி னேனே!
நூலொடுநுண் ணறிவுடையாய்! நுவலரிய
பெருங்காந்தி! கோயே செய்யும்
போலிகள்சொல் தீண்டாமைப் புன்மை
புறங்காட்டிப் புதைப்ப தற்கு [தனைப்
வாலுயிரும் வழங்குதற்கு வாய்த்தபுகழ்
மாமணியே! வாழ்பல் லாண்டு!

## வகுப்புத் தீர்ப்பு






## சட்ட சபை நுழைவு

காங்கிரஸ்காரர் சட்ட சபைக்குள் நுழைவதெனத் தீர்மானித்து விட்டனர். அதற்குரிய முயற்சிகளும் எங்கும் செய்யப்பட்டு வருகின்றன. காங்கிரஸ்காரர் சட்டசபை செல்வதெனத் தீர்மானித்தது, சட்டசபைகளிலிருந்து சுயாஜ்யத்தை அப்படியே பெற்று விடலாம் என்று நம்பியல்ல. சுயராஜ்யம் பெறுவதற்கும் தற்போதைய சட்டசபை அமைப்பிற்கும் ஒரு சம்பந்தமுமில்லை யென்பதை அறிஞர் எவரும் மறுக்கமாட்டார். காங்கிரஸ்காரர் போனால் சட்டசபைகளுள், மற்றவர் போய் உட்கார்ந்துகொண்டு நாட்டுக்குச் செய்யும் தீமைகளை ஓரளவு தடுக்கலாம் என்பதைத் தவிர வேறில்லை.

காங்கிரஸ் கமிட்டி சட்டசபைக்குள் தங்கள் கட்சிக்காரரை நுழைய அனுமதித்து விட்டது. அதனைப் பின்பற்றிச் சட்டசபை செல்ல விரும்பும் காங்கிரஸ்காரருக்கு உதவி செய்தல் காங்கிரஸ்காரர் அனைவருக்கும் கடன். சென்ற போராட்டத்தில் காங்கிரஸை அடக்க அரசாங்கம் எடுத்துக்கொண்ட முறை தவறானதென்பதை வெளிப்படையாக உலகிற்குக் காட்ட இந்தியர் செய்யவேண்டிய காரியம் இத்தேர்தலில் காங்கிரஸ்காரரைக்கொண்டு சட்டசபைகளை நிரப்புவதே யாகும்.

இந்தியாவில் காங்கிரசைவிடப் பெரிய கட்சியும் செல்வாக்குள்ள கட்சியும் வேறொன்றில்லை யென்ற உண்மையைத் தேர்தலில் செய்கையிற் காட்டி விட வேண்டும். தியாகம் செய்தோரை மதிப்பது இந்தியா தேசம் என்ற உண்மையைக் காரியத்தில் காட்ட இந்தியர் தவறுதலாகாது. பெரிய பணம்படைத்தோர், பொருளை அள்ளிப்போட்டுச் சட்டசபைக்குள் ஏறிச் செல்ல முயலலாம். அவரையும் அவருடைய பணத்தையும் மதிக்க வேண்டுவதில்லை. எவர் நமக்காக உண்மையாக உழைப்பாரோ; நமக்காக அவர் பாடுபடுவார் என்பதைக் கொஞ்சமாவது நாமறியும் வண்ணம் எவர் காட்டியிருக்கின்றாரோ அவரை நம்முடைய பிரதிநிதியாக அனுப்பினாலன்றிப் பயன் விளையாதென ஒவ்வொரு வாக்காளரும் கருதுதல் வேண்டும். ஒவ்வொருவரும் தமக்குக் கிடைத்த வாக்குரிமையை வீணாக்குதல் ஆகாது. இதுவரைத் தலையாட்டிகளை அனுப்பி ஏமாந்தது போதும்! இந்தத் தேர்தலில் சட்டசபைகளை யெல்லாம் காங்கிரஸ்காரர்கள் நிறைந்த நிலையங்களாக்க நாட்டவர் தவறமாட்டார்கள் என நம்புகிறோம்.

---

# இடிமுழக்கம்

---

### விடுதலை செய்க

தற்போது சிறையிலிருந்து வரும் சர்தார் படேலின் மூக்கில் ஏதோ நோய் கண்டிருப்பதாகவும் நாளடைவில் அது விருத்தியாகி வருவதால் உடல் மிகவும் இளைத்துப் போகிறதாகவும் தெரிகிறது. அண்மையில் அவரைப் பரிசோதித்த இரு டாக்டர்கள் கால தாமதமாகாமல் ரணசிகிச்சை செய்ய வேண்டுமென்று அபிப்பிராயம் கொடுத்தார்கள். இந்த நிலைமையில் சர்க்கார் உடன் ஸ்ரீபடேலை விடுதலை செய்து விடுவது உசிதமல்லவா? ஸ்ரீ படேல் ஏதோ குற்றம்செய்ததற்காகச் சிறைப்படுத்தப்பட வில்லை 1932ல் காங்கிரஸ் காரியக் கமிட்டித் தீர்மானம் செய்ததும் சர்க்கார் அவரைக் கைது செய்து சிறையில் போட்டு விட்டார்கள். இன்று காங்கிரஸ் சட்டமறுப்பைக் கைவிட்டு விட்டதென்பது வெட்ட வெளிச்சம். அப்படிப்பட்ட நிலைமையிலும் ஸ்ரீ படேலை ஜெயிலில் வைத்திருப்பது ஏற்றுக் கொள்ளத் தகுந்ததாகாது. சிறையிலிருந்தால் எந்த விதமான உடலுர முடையார்க்கும் கடுகளவாயிருக்கும் நோயும் கூடப் பெரிதாகி விடுமென்பது கண் கூடு. ஆகவே ஸ்ரீ படேலைச் சிறையிலேயே வைத்துச் சிகிச்சை செய்யலா மென்று சொல்வதற்கில்லை. சர்க்கார் உடன் அவரை விடுதலைசெய்து நோயை இந்த அளவிலாவது வாசியாக்க வழி விடுவார்களென்று நம்புகிறோம்.

### பயமெதற்கு

சமீபத்தில் பம்பாயில் நடைபெற்ற நபிநாயக தினத்தன்று ஸ்ரீமதி சரோஜனி தேவி செய்த பிரசங்கம் ஒவ்வொரு முஸ்லிமும் நன்றாகக் கவனிக்க



இந்தியச் சட்டசபைத் தலைவரான சர். ஆர். கே. ஷண்முகம் அவர்கள் போனவாரம் வேலூருக்குச் சென்றிருந்தபோது ஜில்லா போர்டும் முனிசிபல் கௌன்சிலும் வரவேற்புப் பத்திரங்கள் வழங்கின. படத்தில் சர். ஷண்முகம் செட்டியார் சர். கே. வி. ரெட்டி, கனம் பொப்லி ராஜா, ஜனாப் வி. அப்துல் ஹமீம் சாகிப் பகதூர், திவான்பகதூர் ஜி. நாராயணசாமி செட்டியார், கனம் யு. ராமுண்ணி மேனன் முதலியோர் காணப்படுகின்றனர்.
—P. P. B.

வேண்டுவதாகும். ஸ்ரீமதி சரோஜனி தேவி நபிகளின் வாழ்க்கையிலிருந்து பல உண்மைகளை எடுத்து விளக்கித் தற்போதிய முஸ்லிம்கள் அவைகளை ஏன் கடைப்பிடிக்கவில்லை என்று வினவுகின்றார். ஓரிடத்தில் அவர் "நபிகள் நாயகம் எவ்வளவு தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் வாழ்க்கை நடத்தினார்! இன்றைய முஸ்லிம்களோ எவ்வளவு சந்தேகமும் பயமும் கொண்டு வாழ்கின்றார்கள்! மகமது நபி பொது வாழ்க்கை ஆரம்பித்தபோது ஒரு மைனாரிட்டிக் கட்சி கூடவும் அவர் பக்கத்திலில்லை. எனினும் ஆண்மையுடன் வாழ்ந்ததைக் காண்கின்றோம். இன்றைய முஸ்லிம்களோ 7 கோடிப் பேரிருந்தும் ஏதேதோ தவறுதலாக எண்ணித் தம் சகோதரர்களை விட்டு நீங்கப் பார்க்கிறார்கள்" என்று கூறினார். இவ்வுரை முஸ்லிம்கள் எந்நாளும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டுவதல்லவா? எப்படியும் ஒரே தேசத்தில் வாழ வேண்டிய நிலைமையிலிருந்து வரும் இருபெரும் வகுப்பினர் ஒருவருக்கொருவர் பயப்படவும் பிரிந்திருக்கவும் நினைப்பதென்றால் எவ்வளவு பேதைமை! முஸ்லிம் நண்பர்கள் ஸ்ரீமதி சரோஜனி தேவியின் அறிவுரையைக் கடைப்பிடித்து ஹிந்துக்களைத் தம் சகோதரர்களென்றுகருதுவார்களா?

## மெடினாவில் கைராட்டை

மெடினா அரேபியாவிலுள்ள ஓர் நகரம். இதில் மகமது நபி சிலகால் வாழ்ந்து வந்ததால் முஸ்லிம்கள் அதனை ஓர் புண்ணிய பதியாகக் கருதுகின்றனர். சமீபத்தில் அங்கிருந்து கிடைத்த ஒரு செய்தியால் அந் நகரத்தில் ஏராளமான சர்க்கா (கைராட்டை) சுழல்கின்றன வென்று வெளியாயிற்று. ஆகவே அதனைப் பின்பற்றிப் பம்பாய் முஸ்லிம்கள் சிலர் புதிதாகக் கைராட்டையைச் சுற்ற ஆரம்பித்தனர். அதனைக் கண்டு ஹைதராபாத் முஸ்லிம்களும் தற்போது சர்க்கா உபயோகிக்கத் தொடங்கியிருக்கிறார்களாம். நாளடைவில் முஸ்லிம்களெல்லாம் ராட்டினம் சுற்ற ஆரம்பித்து விட்டாலும் விடலாம். தேசத்தின் பொருளாதாரக் கொள்கை பற்றி ராட்டினம் பரப்பப்படாது மத உணர்ச்சி பற்றி முஸ்லிம்களிடையே பரவி வருவதைச் சிலர் கண்டிக்கக் கூடுமாயினும், கதர் அபிவிருத்திக்கு அது ஒரு புதிய வழியில் உதவும் என்பதில் சந்தேகமில்லை.

## மதிப்புரை

### மீலாத் மலர்

தாருல் இஸ்லாம் பத்திரிகாலயத்திலிருந்து வெளியிடப்பட்டிருக்கும் 'பதினைரும் ஆண்டு மீலாத் மலர்' ஒன்று நம் பார்வைக்கு வந்தது. கிரவுன் 1x2 அளவில் நல்ல காகிதத்தில் அமைந்திருக்கும் அம்மலரில் பல நல்லகட்டுரைகளும், சித்திரங்களும் செய்யுட்களு மிருக்கின்றன. பொதுவாக எல்லோரும்—விசேஷமாக முஸ்லிம்கள்—அதனைப் படிக்கவேண்டுவதாகும். அதன் விலை அணா மூன்று. தேவையானவர்கள் தாருல் இஸ்லாம் ஆபீஸ் 158-B, பிராட்வே, சென்னை. என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

### தமிழ் லெக்ஸிகன்

சென்னை லெக்ஸிகன் கமிட்டியார் ஆருவது வால்யத்தின் முதல் பகுதியை வெளியிட்டிருக்கிறார்கள். அதில் "மு" முதல் "மோ" வரையிலுள்ள எழுத்துக்களை முதலாகக் கொண்டுவரும் தமிழ்ப் பதங்கட்கு உரை தரப்பட்டிருக்கிறது. நல்ல வழவழப்பான காகிதத்தில் அழகாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கும் இவ்வகராதியில் தமிழ்ப் பதங்கட்கு ஆங்கில உச்சரிப்பும் ஆங்கிலத்தில் பொருளும் கொடுக்கப்பட் டிருக்கின்றன. இதன் விலை ரூ. 2. சென்னை ஜார்ஜ் டவுன் ஸி. குமாரசுவாமி நாயுடு அன் சன்ஸில் கிடைக்கும்.

### தமிழ் வருட மலர்

சென்னை ஜார்ஜ் டவுனிலுள்ள தென்னிந்தியப் பிரசுரக் கம்பெனியார், (1934—35) தமிழ்வருட மலர் ஒன்றை வெளியிட்டிருக்கிறார்கள். அதில் பல நல்ல கட்டுரைகள் படங்கள், பிரஸ்தாப வருடத்தில் நிகழ்ந்த முக்கிய செய்திகள், பஞ்சாங்கம், தென்னிந்தியாவிலுள்ள முக்கிய ஸ்தலங்களைப் பற்றிய குறிப்புகள் வியாபாரிகள் விவரம் ஆகியவை அடங்கியிருக்கின்றன; கிரவுன் 1x4 அளவில் 88 பக்கங்கொண்ட பிரதி யொன்றின் விலை அணா 2. வேண்டுவோர் சௌத் இந்தியன் பப்ளிசிட்டி கம்பெனி, ஜார்ஜ் டவுன், சென்னை யென்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

## வர்த்தகம் ஓங்குமா?

இந்தியா புதிய சீர்திருத்தத்தை ஏற்றுக் கொண்டாலும் வியாபார விஷயம் பாதகமாகவேதா னிருக்கும். சணல், பஞ்சு என்ற இருவகைப் பொருட்களையும் விற்க முடியாமற் போகும். இப்போது இவ்விரண்டு செடிகளும் (முடிவென்ன வென்பதையே யோசிக்காதபடி) அதிகமாகப் பயிர் செய்யப்பட்டு வருகிறது. 1928–29-ல் (அதாவது வியாபார மந்தத்திற்கு முந்திய வருடத்தில்) இந்தியாவில் விளைந்த மேற்படி பொருட்களில் பாதிதான் ஏற்றுமதி செய்யப்பட்டது. அதனால் மொத்தம் கிடைத்த வருமானம் முறையே 63 கோடியும் 83 கோடியுமாகும். இனிமேல் இந்தியா அப்பொருட்களைக் கொண்டு என்ன செய்யும்?

வேலை செய்யப்பட்ட சாமான்கள் 1913–14-ம் வருடத்தைவிட 1918–19-ம் வருடத்தில் 22 சதவிகிதம் உயர்ந்தது. ஆனால், வியாபார மந்தத்திற்கு முன்பு இத்தகைய ஏற்றுமதி பொருட்கள் மிகவும் குறைந்துவிட்டன. காரணம், நாட்டில் பயிர்த்தொழி லதிகரித்துவிட்ட தென்பதாகும்.

சென்ற 60 வருடங்கட்குள் ஏற்றுமதி 6 பங்கு அதிகரித்தது உண்மை; ஆனால், இறக்குமதி 8 பங்கு கூடிவிட்டது. இத்தகைய மாற்றத்தின் காரணம் மேனாட்டாரோடுள்ள சம்பந்தமும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பழக்கமும் ஆகும். மேனாட்டுப் பழக்கங்கள் நம்மிடம் வந்து குடிபுகுந்ததால் நாம் அந்நாட்டுப் பொருட்களை அதிகமாகத் தேடலானோம். அதோடு சர்க்கார் முறையும் மேனாட்டை எதிர்பார்க்கும்படி செய்கின்றது. எனவே, நாம் பொருட்களைக் கையினால் அமைக்கும் குணத்தைக் கைவிட்டு விட்டோம்.

—கல்கத்தா ரிவ்யூ.

### படத்தில் 500 வருடம்

சினிமாப் படங்களை உபயோகிப்பதினால் சிறந்த நன்மையை அடைந்து வரும் சோவியத் ருஷ்யா 500 வருடமாகத் தன் நாட்டிலிருந்து வரும் மனித வாழ்க்கையைப் படமாகத் தயாரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகின்றது.



# காந்தி திருத் தசாங்கம்

ராய. சொ.



### பாயிரம்.

அகவற்பா.

சேண்புகழ் கொண்டஏர் வாடாச் சிறையுறை
காண்டகு சிறப்பிற் காந்தி யடிகட்கு,
நாமம், நாடு, நகர், நதி, மலையே,
ஊர்தி, படை, முரசு, ஒண்டார், கொடியெனும்
அங்கம் பத்தும் வெண்பாப் பத்தில்
பாடினன்; காரைப் பதிவாழ் ராய
சொக்க லிங்கன்; தொல்கலி யாண்டு
ஐயா யிரத்துமுப் பத்து நான்காம்
ஆங்கீ ரசவில் ஆனிப்பதி னெட்டில்;
வேலூர் அரண்மனை மேவிய நாளென்.

### நேரிசை வெண்பா.

1. பெயர்.

சிறையார் மணிக்கிள்ளாய்! தேசம் செழிக்க
இறையான ஏதமிலான் பேரென்?—அரசாள்
முடிமன்னர் அஞ்சவரு மோகனதாஸ் காந்தி
அடிகளவன் பேரென்று அறை! (1)

2. நாடு.

பச்சைப் பசுங்கிளியே! பாரினுயர் காந்திமகான்
மெச்சுபுகழ் நாட்டை விளம்புவாய்?—நச்சு
தனியிமயம் தொட்டுத் தமிழ்க்குமரி ஈறும்
முனிவர்நாடு என்றே மொழி! (2)

3. ஊர்.

கொஞ்சுமொழி அஞ்சுகமே! கோதறியா எங்காந்தி
விஞ்சும் அரும்பதியென்! விள்ளுவாய்?—அஞ்சுலகில்
யாதுமவன் தன்னூரே! யாவரும் அவற்குறவென்று
ஏதமொன்றும் இன்றி இயம்பு! (3)

4. ஆறு.

வானூர் மரகதமே! மாதவத்துப் புத்திரிபாய்
ஆனத செல்வன்உயர் ஆறுநவில்?—தேன்நாறும்
கங்கை முதல்தென் கடல்வீழ் பொருநைவரை
இங்கிதப்பல் யாறென்று இசை! (4)

5. மலை.

இன்மழலைச் சோலை எழிலார் இளந்தத்தாய்!
சொன்னயத்தாற் குற்றமலை சொல்லுவாய்?-தன்னேர்
இரும்பொன் இமயமுதல் எற்பொதிகை ஈறாப்
பெருமலைகள் எண்ணிலவாம் பேசு! (5)

6. ஊர்தி.

அஞ்சொலிள மெல்லியலார் அங்கைவளர் அஞ்சுகமே!
செஞ்சொலான் செல்லூர்தி செப்புவாய்?—விஞ்சுகலை
பூண்ட நலஞ்சேர் புகழார் பெருங்குணத்தில்
மாண்டார் மனமென்று உரை! (6)

7. படை.

அமிழ்த மொழிபடிப்பான் ஆயிழையார் அங்கை
கமழு மரகதமே! காந்தி—இமிழ்படைகொல்?
குன்றெழுந்து வந்திடினும் கூறு படுக்குமிசை
குன்றாத உண்மையெனக் கூறு! (7)

8. முரசு.

சிறுகுதலைத் தத்தாய்! திருவாளன் முன்றில்
மறுகுமணி மாமுரசம் யாதோ?—அறமே!
இனிமை! கருணை! எளிமை! பொறை! வாய்மை!
புனிதம்! இவை என்றே புகல்! (8)

9. மாலை.

செம்பவள வாய்க்கிள்ளாய்! சீரார் சபர்மதியான்
வம்பவிழும் மாலை வழுத்துவாய்?—எம்பெருமான்
வான்கீண் டுயர்ந்த வரைநேர் பெரும்புகழைத்
தான்கொண்டான் தாரென்றே சாற்று! (9)

10. கொடி.

ஏரார் இளங்கிளியே! எங்கள் உயிர்க்குயிரான்
காரோர் கொடியென்! கழறுவாய்?—பாரேத்தும்
மும்மை நிறத்து முதுநாட் டமைத்தஉயர்
செம்மைக் கொடியெனவே செப்பு! (10)

# புராண விநோதம்

(வைசம்பாயனன்)

"ஒரு கடிகைப்போது, குற்றாலத் திருந்தவர்கள் கயிலாயத்திருப்பர் கற்ப கோடி காலம்." இது அழகிய பாப் பரடுவதில் வல்ல திரிகூட ராஜப்பக் கவி ராயர் பாடிய திருக்குற்றாலத் தலபுரா ணத்திலுள்ள ஒரு செய்யுளில் காலே யரைக்கால் பாட்டு.

ஒரு நாழிகை குற்றாலப் பதி யிலே வீற்றிருந்தவர்கள் பரமசிவனுக் குச் சொந்தமான கயிலை மலையிலே கற்ப கோடி காலம் வாழ்வார்களாம்! அப் படியானால் நல்ல மனிதர்கள் கயிலைமலை யில் ஒரு நொடிப் போதுகூட இருக்க விரும்ப மாட்டார்கள். குற்றாலத்தில் பதினாயிரங் கணக்கில் பொருளை வீசிச் சீட்டாடும் கோஷ்டியினரும் அவர் தம் ஆசைக்கினிய அணங்குகள் குழுவும் வரிசை வரிசையாகக் கயிலாயத்தில் தரும் காட்சியைக் கண்டு சகிப்பது எப்படி?

* * *

நைடதம் பாடிய அதிவீர ராமபாண் டியனார் நிடதநாட்டு மக்களின் அழகை வர்ணிக்கும்போது "உருவில் மைந்த ரில் வேனில்வேட் குடைகுநரில்லை" என்று உரைக்கின்றார். அழகு இல்லாத வர்கட்குள்ளே மன்மதனுக்குத் தோற் பவர் இல்லை; எவர் அங்கு அவலட்சண மானவர் என்று கருதப்படுகிறாரோ அவர் மன்மதனை விடக் குறைந் திருக்கமாட்டார். இப்படிக்கூறிய ஆசி ரியர், தனது கதாநாயகனும் அந்நாட்டு மன்னனும் ஆகிய நளனைப்பற்றிக் கூறு மிடத்து "பொரு சிலை வேனில் வேள் அனைய பொற்பினன்" என்று கூறு கின்றார். "மன்மதனை ஒத்த அழகினன் நளன்" என்பது இதன் பொருள். அப் படியானால் அந்நாட்டிலுள்ள எல்லோ ரையும்விட அழகில் குறைந்தவன் நளன் என்றுதானே கொள்ளவேண்டியதிருக் கிறது! போனால் போகட்டும். நளன் கடை கெட்டவனாக இருக்கட்டும்; நமக்கென்ன அதைப்பற்றி; தமயந்திக் கல்லவா அந்த வருத்தம் இருக்கவேண் டும்?

* * *

கண்ணகி மதுரையை எரித்தாள்! இது இந்த வாரத்து நிகழ்ச்சியல்ல; மதுரை யூரார் வருத்தப்பட வேண்டாம். எரிப் பதற்கு அவள் உபயோகித்த பொருள் நெருப்பல்ல; அதுதான் விநோதம். கொங்கையைத் திருகி எறிந்தாளாம்! ஊர் நெருப்புப் பிடித்து எரிந்து விட்ட தாம்! "அதில் என்ன ஸ்குருவா போட் டிருந்தது? நெருப்பு அதற்குள் ஏது?" என்றெல்லாம் குறுக்குக் கேள்விகள் போட்டு விடாதீர்கள். ஸ்குருவைப் பற்றி நமக்குத் தெரியாது; இருக்க லாம்; இல்லாமலு மிருக்கலாம். நெருப்பு உத்தமப் பிராமணர்கள் கையிலெல்லாம் இருக்கிறதாமே! அப்படியானால் உத் தமியின் முக்கிய உறுப்பில் ஏன் இருக்க லாகாது!

* * *

பெற்ற தாயை இன்பம் துய்த்தா னும்! அந்த நற்காரியம் இடையூறின்றி நடந்தேறுவதற்காகப் பெற்ற தந்தை யைக் கொன்றானும் ஒரு மாபாதகன்! அவனுடைய மாபாதகத்தைத் தீர்த்து அவனுக்குக்கூட முக்தியைக் கொடுத்து விட்டாராம் மதுரைக் கடவுள். தந்தை யைக் கொன்றவனுக்குக் கொடுக்கப் பட்ட மோட்சம் எத்தகையது என்பது நமக்குத் தெரியாது. கொலையாளிகட்கு நீதிபதிக் கடவுள்கள் மோட்சம் கொடுப் பதை இப்போதுங் காண்கின்றோமாத லால் அதுவும் உண்மையாக இருக்க லாம்.

* * *

வீமன் ஒவ்வொரு நாளும் பல் துலக்குவதற்கு ஒரு பனை மரத்தை அப் படியே பிடுங்கித் தூர், தலை இரண்டை யும் கிள்ளி யெறிந்துவிட்டுப் பல் தேய்ப் பானும்! இருக்கலாம்! வீமன் என்ன சாதாரணமான மனிதனா? இந்தக் கட் டுக்கதை பாரதத்தில் இல்லா விட்டால் என்ன? பாரதம் பாடிய புலவர்களை விடப் பாரத நாட்டு மக்கள் கற்பனா சக் தியில் இளைத்தவர்களாகிவிடுவார்களா? வீமன் வாழ்ந்த இடத்திற்குச் சமீபத் தில் இருந்த சிறுவர்களுக்குக் கொண் டாட்டமாக இருந்திருக்கும். தினம் நுங்கு குடிக்கலாமல்லவா?

* * *

ஆண் பெண்ணாகவும் பெண் ஆணாக வும் மாறும் நிகழ்ச்சிகள் அடிக்கடி பத் திரிகைகளை அலங்கரித்து நிற்கின்ற னவன்றோ? இதில் என்ன புதுமை! பாரத காலத்திலேயே இந்நிகழ்ச்சி நடந் திருக்கிறது. ஒரு மனிதன் "இளை யெனும் பெயர் மடவாலாயினன் என்ப." என்று கூறுகிறார் வில்லிபுத்தூ ராழ்வார். ஆணாக இருந்த ஒருவன் பெண்ணாகமாறி விட்டனனும். அம் மாறிய பெண் புதன் என்ற ஒருவனைக் கூடிப் புரூரவா என்ற மன்னனைப் பெற் றாளாம்! அவர் வழி வந்த மன்னர் பலப்பலர்! அவர் வழித் தோன்றல் கள்தாமாம் பாண்டவர், கவுரவர் முத லாயினோரும்!








## பழைய நூல்கள்

ராய. சொ.

பழைய நூல்கள் பற்றித் தமிழ் நாட் டில் இருதிறப்பட்ட கருத்துக்கள் இருக் கின்றன. "பழைய நூல்களே நமது வாழ்க்கைக்கு அமைந்த முதற் கருவி; அவைகள் இட்ட கோட்டைத் தாண் டாமல் நடப்பதே நமது கடமை; அவை களினின்றும் சிறிதும் நாம் தவறி நடத் தல் ஆகாது." என்று கருதுகின்றார் ஒரு சாரார். இவருக்கு முற்றும் மாறாக, "பழைய நூல்களை யெல்லாம் குப்பைத் தொட்டியில்—அல்லது கருங் கடலில் —அன்றி வேகின்ற தீயில் போடுதல் வேண்டும்; அவைகளைத் தொடுதலே ஆகாது" என்று இயம்புகின்றார் இன் னொரு சாரார். இருவர் கூற்றும் ஏற் றுக்கொள்ளத் தக்கதன்று.

தமிழ் மொழியில் பழைய நூல்கள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றுள் பெரிதும் வளர்ந்து செல்லும் இற்றை யுலகும் வியக்கும்படியான அழகு கொண்ட கருத்துக்களை அடக்கிக்கொண் டிருக்கும் நூல்கள் பல இருக்கின்றன. முதலில் எல்லோரும் அவற்றைப் பயில வேண்டும். படித்துத் தெரிந்துகொண்ட பிறகே அவற்றின் உள் நுழைந்து ஆரா யப் புகுதல்வேண்டும். இதில் மேற் சொன்ன இரு சாராரும் தவறுடை யாரே. பண்டைச் சுவடிகளை அப் படியே கொள்ளவேண்டும் என்று கூறு கின்றவருட் பலர் அவை கூறுவன யாவை என்பதைச் சிறிதும் உணரா வில்லை யென்பது நிச்சயம். எல்லாவற் றையும் அப்படியே கொள்வதென்பது எப்படி? ஒன்றுக்கொன்று மாறுபட் டது, அறிவுக்கு—அநுபவத்துக்குப் பொருத்தமில்லாதது அநேகம் உண்டு பண்டை நூல்களில்; அவைகளை யெல் லாம் எப்படிக் கொள்வது? இதனால் சொல்கின்றவர்க்கே என்ன சொல்கின் றார் என்று விளங்கவில்லை எனத் தெரி கின்றது.

எல்லாப் பழைய நூல்களையும் அப் படியே தள்ளிவிட வேண்டும் என்று கூறுவார், அவற்றிலுள்ள கொள்கை ஷத்தை அறியவே இல்லை யென்று உறுதியாகக் கூறலாம். ஆயுந்தொறும் தொறும் வியந்து நயக்கக்கூடிய புதுப் புது அழகுகள்—புதைந்த கருத்துக்கள் —உயர்ந்த பொருள்கள்—சிறந்த கற் பனைகள் பலப்பல பொதிந்து கிடக்கின் றன பண்டைக் காவியங்களில். அவை களை அப்படியே தள்ளிவிட வேண்டும் என்பதற்குப் பொருளுண்டா? மேற் கூறிய இரண்டு வகையாரும் தமிழுக்கு —தமிழ் நாட்டுக்குக் கேடு செய்பவ ராவர்; உலக இயற்கையையே அறி யாதவ ராவர். முன்னவர் எல்லாம் வேண்டும் என்று சொல்வதற்காகப் பின்னவர் ஒன்றும் வேண்டாம் எனச் சொல்கிறார் என்றால் அப்பேச்சுப் பொருள் பெறாது. இதில் இருவர் செயலும் ஒரே படிதான்.

பழமை என்ற ஒரே காரணத்தினால் மட்டும் எல்லாம் கொள்ளத் தக்கதாக ஆகிவிட மாட்டாது. அன்றி அதே கார ணம் பற்றி அனைத்தும் தள்ளக்கூடிய நிலைமையும் எய்தி விடாது. கொள்ளுத லும் தள்ளுதலும் பழமை—புதுமையைப் பொறுத்தவையல்ல; அவை பொருளின் தன்மைகளைப் பொறுத்தன. எல்லாக்

காலத்திலும் நல்லது நல்லதுதான்; கெட்டது கெட்டதுதான்! பழமைக்காகக் கெட்டது நல்லதாகி விடாது; புதுமைக்காக நல்லது கெட்டதாகவும் ஆகிவிடாது. பழமை ஒன்றே காரணமாக யாவும் நல்லவை என ஒருவன் கூறுவானுனுல் அவன் அறிவுலகத்திற்குப் புறம்பானவன் என்று துணிந்து கூறலாம். பழய காலத்தது என்றுல் அது புனிதமானது; அதில் பிசகு இருக்க நியாயமில்லை; யெனக் கண்ணை மூடிக்கொண்டு கூறுவார் பலரை நாட்டில் காண்கிறேம். அவர் பாமர உலகைத் தவிர மற்றதை அறியும் கண் பெறவில்லை யென்றுதான் வருத்தத்தோடு கூற வேண்டியதிருக்கிறது.

முற்காலத்திருந்தமைக்காக எல்லாம் நல்லவையாக இருக்க முடியுமா? இது இயற்கைக்கு விரோதமல்லவா? உலகத்தில் எந்தக் காலத்திலும் அறிஞனும் உண்டு; அஃதருகியவனும் உண்டு. தவிர எப்போதுமே அறிஞர் சிலரும் மற்றையோர் பலருமே உலகில் இருந்திருக்க முடியும் என்பது ஆராய்ச்சியாளர் கொள்கை. கண் கூடாக இதனை இன்றும் காணலாம். தவிரப் பொது வகையில் பார்க்குங்கால் உலகம் நாளுக்கு நாள் அறிவு வளர்ச்சியில் மேலோங்கிச் செல்லும் போது, பழயவரே எல்லாத் துறையினும் மேம்பட்டவர்; அவரிட்டதே சட்டம்; எனுஞ் சொல் அறிவு உலகத்தில் வரவேற்கப்படுமா என்ற கவலை பழமையே பெரிதென்பார்க்கு இருக்க நியாயமில்லை.

பாரதியார் பகருமாறு "முன்பிருந்து எண்ணிலாது புவிமேல் மொய்த்த மக்களெலாம்" முனிவர்களா? முன்னே மூடரும் பலர் நூல் செய்து போட்டுப் போயிருக்கின்றுர். பழமைக்காக அவைகளை யேற்றுக்கொள்தல் ஆகாது. இற்றை யுலகம் எவ்வளவோ தீய நூல்களை உற்பத்தி செய்வதைக் காண்கின்றேம். இவைகளையெல்லாம் இன்னும் சின்னுட் சென்றுல் பழய வரிசையில் சேர்த்துச் சிம்மாசனத்தில் இடந்தந்து முடிவணங்க வேண்டுவதுதானே பழமையே பிடிப்பார் கொள்கைப்படி? பழமை என்பதற்குத்தான் ஒரு வரையறை கிடையாதே. பழமையென்று இத்தனை வருடங்கட்கு முற்பட்டதைத்தான் சொல்லவேண்டும் என்று இலக்கணத்தில் வரம்பு ஏதும் இருப்பதாகத் தாணவில்லை. "முன் பெனச் சொலில் நேற்றுமுன் பேயாம்; மூன்று கோடி வருடமும் முன்பே." நிற்க,

பழமை யொன்றுமே நமக்கு வேண்டாம் என்ற கூற்றுப் பெரிதும் கண்டிக்கத்தக்கது. பழய இலக்கியங்கள் கூறும் எல்லாவற்றையும் அப்படியே கொள்ள வேண்டும் என்று சொல்வோர் எவ்வளவு தீமை செய்கின்றுரோ, அவ்வளவு தீமை செய்கின்றுர் அவற்றை அடியோடு தள்ளவேண்டும் என்போரும். இரண்டு சாராருமே பழய இலக்கணங்களைப் படித்துத் தெரிந்து கொள்ளவில்லை யென்பது கொஞ்சமும் மிகையாகாது. படித்திருந்தால் முன்னவர் அவை கூறும் தீமைகளையும் கொள்ளும்படி கூறமாட்டார்; பின்னவர் அவற்றிலுள்ள அருமணிகளை இழக்கச் சொல்லத்துணியமாட்டார். எனவே, எல்லா வகையான தமிழரும் முதலாவது தமிழ்ப் பழய இலக்கியங்களைப் பயில வேண்டும். பின்னர்,

அவற்றை ஒவ்வொன்ருக ஆராய்ச்சிச் சாலையில் கொடுத்துக் கடைதல் வேண்டும்: அப்போது உண்மை புலப்படும். குப்பைத் தொட்டிக்கே ஏற்றன ஒரு சில இருந்தாலும் அறிஞர் வியக்கத்தக்க பொருள்களைத் தொகுத்து வைத்த பழய இலக்கியங்கள் பலவற்றை ஆராய்ச்சியாளர் கண்டு களிப்பார் என்பது உறுதி.

## ஹிட்லர் வெற்றி.




ஜர்மன் சர்வாதிகாரி கலகத்தை அடக்கிவிட்டதாக இறுமாப்புக் கொள்கிறுர், ஆனல் உள்ளூரப் புகைந்துகொண்டிருப்பது தெரியவில்லை.



# ஸி. ஐ. டி. ரங்கநாதம்

(தாத்தா)

ஆதிமூர்த்தி "லோகாபிமானி" பத்திரிகையின் ஆசிரியர். அவருக்கு சுமாராகப் பேரும் புகழு மிருந்தன. திண்டுக்கல்லில் பெரும்பாலாக எல்லோருக்கும் அவரைத் தெரியும். சற்றேறக் குறைய 43 வயதை எட்டியிருந்த அவர் அதிதீவிரக் காங்கிரஸ் பற்றுடையவர். தாராளமாகக் காந்திஜீயையும் காங்கிரசையும் சுயராஜ்யப் போராட்டத்தையும் பற்றிப் பேசுவார். உண்மையில், நாடு, தன் சுயேச்சை நிலைமையை அடைந்து, நலம் பெற்றுய்ய வேண்டுமென்பது அவருடைய அவா. ஆனல் அவர் கோழை; அதோடு ஒரு விதமான "சோடா பாட்டில்" குணமுமுடையவர்.—அதாவது திடீரென உக்ரத்தைக் காண்பித்துவிட்டுப் பிறகு "பச்சை"த் தண்ணீராக மாறிவிடும் சுபாவமுடையவர். இந்த இருவித குணங்களும் சிலகால் ஒன்றுக்கொன்று முரணியவை போல் தோன்றும்; சிலகால் அவருக்கு நல்ல பெயரையுமுண்டுபண்ணும். ஆனல் ஐந்தொகை போட்டுப் பார்த்தால் அவர் கஷ்டமடைந்ததுதான் அதிகமென்று காண்போம். உப்புச் சத்தியாக்கிரகத்தின் போது அவரைக் கைது செய்யப்போவதாக ஓர் வதந்தி பரந்தது. யாரோ ஒருவரிருவர், ஸி. ஐ. டி. ரங்கநாதம் என்ற ஒரு இரகசியப் போலீஸ் புலி அவரைப் பார்த்து ஏவிவிடப் பட்டிருப்பதாகக் கதையும் கட்டினர்கள். அக்கதை எவ்வளவு தூர முண்மை யென்பது தெரியாமற் போனலும் ஆதிமூர்த்தி பயந்த பயத்திற்கு அளவில்லை. அவருக்குச் சிறையென்றுல் 110 டிக்ரீக் காய்ச்சல் தோன்றிவிடும்; அதோடு போலீசார் பாதுகாப்பென்றுல் "டைபாயிட்"தான். எனவே 'ஸி.ஐ.டி. ரங்கநாதம், கைது—என்ற சமாசாரத்தையும், பத்திரிகைகளில் வரும் "சென்னைக் கூட்டத்தில் குதிரைப் பாய்ச்சல்—சேலத்தில் இருவருக்கு மண்டை யுடைந்தது—நாமக்கல்லிலொருவர் நைந்து போனர்—ஸீதாலட்சுமிக்கு சிறை, திரு. ஐயனருக்கு ஆறு மாதம்" என்பன போன்ற தலைப்புகளில் வரும் செய்திகளையும் படிக்கப் படிக்க அவருடைய இருதயம் ஆடிய ஆட்டத்தைச் சொல்ல முடியாது. நாம்புகளில் இரத்தம் பஞ்சாப் மெயில் வேகத்தில் ஓடிற்று. பலமுறை அவர் ஜுரத்திற்கு மருந்து சாப்பிட்டார். அன்றி, பல நாளிரவு தன்னைப் போலீஸ் கான்ஸ்டெபில் பிடித்துச் செல்வது



போலக் கனவும் கண்டார். அந்தப் பொழுதிலெல்லாம் அவர் வாய்விட்டுச் சத்தம் போட்டிருக்கின்றுரென்று மனைவி அமுதம் கூறுகிருள். அவளுக்கு அதுகாலைத் தன் புருஷனின் கூச்சலுக்குக் காரணம் தெரியாது போனலும், உப்புச் சத்தியாக்கிரகம் ஆரம்பமானது முதல் அவர் ஓர் மாதிரியாகத்தானிருக்கின்ரு ரென்று தன் தோழிகட்குச் சொன்னதுண்டு.

* * *

இப்படிப்பட்ட குழப்பமான சமயத்தில்—எவ்வழியிலும் சிறை செல்லாது தப்பிக்கொள்ள வேண்டுமென்ற ஆசை நிரம்பியிருந்த காலத்தில்—அதற்காக அடிக்கடி இரகசியமாக வெளியூர்கட்குச் சென்று வந்த வேளையில்—ஒரு நாள் தற்செயலாக மதுரைக்குச் சென்றுர். அங்கு அவருடைய ஆப்த நண்பாகிய நடேசனின் வீடு தல்லாகுளத்திலிருந்தது. அங்கு ஒன்றிரண்டு நாள் தங்கியிருப்பது சில காரியங்கட்கு வசதியா யிருக்குமென்று நினைத்தால் நேராக அங்கு சென்றுர். ஆ! நல்ல வேளையோ கெட்ட வேளையோ அங்கு நடேசன் இல்லை. அவருடைய மனைவிக்கு ஆதிமூர்த்தியைத் தெரியாது. அவரிடம் விசாரித்தபோது "இரவு 8 மணிக்கு வருவார்கள்" என்றுர். இப்பேச்சு நடந்தபோது மணியோ 5-30-தான் இருக்கும். சூரியன் மதுரை ஜங்ஷனில் வீழ்ந்து கொண்டிருந்தான்; காரைக்குடி ரோடு வழியாக இருள் வெள்ளம் பாய ஆரம்பித்துக் கொண்டிருந்தது; வெளியூர்க் குருவிகளெல்லாம் பறந்து போய்விட, மதுரைக் குருவிகள் ஊரை நோக்கிக் கூட்டம் கூட்டமாகப் பறந்து வந்து கொண்டிருந்தன. எனவே ஆதிமூர்த்தி "அம்மா, எனக்கு திரு. நடேசனைப் பார்க்கவேண்டும்; அவர் எனது ஆப்த நண்பர். அவர் வருவது வரையிலும் உட்கார்ந்திருக்கிறேன்" என்று கூறிக்கொண்டு தடதடவென மேன்மாடிக் கேறிவிட்டார். முன்னும் பின்னும் (இடப்புறமும் வலப்புறமுமல்ல) தெரியாத ஒருவர் இப்படி மேன்மாடிக்கு ஏறியது ஸ்ரீமதி நடேசனுக்குப் பிடிக்கவில்லை. ஆனல் வந்தவரைப் பற்றிய வரலாறு நன்ருகத் தெரியாததால் வாய்விட்டு ஒன்றும் கூறவும் முடியவில்லை. ஆகையால் குழம்பித் திகைத்து வீட்டுக்குள் செல்வதும் வெளி வாயிலண்டை போவதும் பக்கத்து வீட்டுப் பத்மினியை எட்டிப் பார்ப்பதுமாகப் பொழுதைப் போக்கினர்.

* * *

அந்த வேளையில் ஆதிமூர்த்தி மேன்மாடியில் நின்றுகொண்டு வெளியே பார்க்க, ரோட்டில் யாரோ ஒருவர்—நல்ல உடற்கட்டுடையவர்—நாகரிகத் தோற்றமுடையவர்—நவீன மாதிரியில் சட்டை யணிந்திருந்தவர்—தலையில் குல்லாயும் கையில் ரிஸ்ட் வாட்சும், காலில பூட்சும் அணிந்து ஜேபியில் குறிப்பெடுக்க வைத்தாற்போன்ற காகிதமும் பௌண்டன் பேனவும் வைத்திருந்தவரொருவர்—நின்று ஒரு பாதசாரியிடம் "மிஸ்டர் ஆதிமூர்த்தி வந்திருப்பது இந்த வீட்டில்தானு?" என்று மெதுவாகக் கேட்டார். இதனை அவருடைய உதடசைவுகளினலும், பார்வையாலும், கை சைகையாலும்

தெரிந்து கொண்ட ஆதிமூர்த்தி என்னென்னமோ பிரமாதமாக நினைத்து—ஏன் ஐ. டி. ரங்கநாதமே தன்னைத் தேடி மதுரைக்கு வந்துவிட்டதாகக் கருதி—பயந்த பயத்திற்கு அளவில்லை.

அவர் "ஐ.டி. ரங்கநாதனை"க் கண்டதும்—ஆம்! ஏன் நீட்டவேண்டும்—எந்த விடத்தில் சர்க்கஸ் பயின்ருரோ ஆதிமூர்த்தி! ஒரே குதிப்பு மேன் மாடியிலிருந்து—தலையில் நாலடி—உழுந்து இரத்தம். இந்தச் சிறு நஷ்டத்தோடு அடுத்த தளத்தில் வீழ்ந்தார். அப்பால் ஒரே பாய்ச்சலில் ஸ்ரீமதி நடேசனையும் சமையற்கட்டையும் கடந்தார். பின்புறம் இரைத் தோட்டமொன்று சிறிதாயமைக்கப்பட்டு, பக்கத்து வீட்டுப் பத்மினியின் கை நீண்டு விடாதபடி, முட் கம்பியினல் சுற்றப்பட்டிருந்தது. அதையும் ஒரு பாய்ச்சலில் தாவிக் கடந்தார். இதில் அதிக நஷ்டமில்லை. பாதத்தில் அரை டஜன் ஆணிகள்தான் கிழித்தன. அதையும் பொருட்படுத்தாது ஓடினர் கொல்லைப் பக்கத்துச் சந்து வழியாக. சுமார் 43 வயதான ஒருவர்—ஆளில்லாத போது வீட்டுக்குள் புகுந்திருந்தவர்—திருடன் மாதிரி, குதிக்கவும், ஓடவும் பெண்களிருக்கு மிடத்திற்கும் கொல்லைப் பக்கத்திற்கும் போகவும் செய்வதென்ருல் அந்தப் பெண்ணுவது சும்மா விருப்பாளா? ஸ்ரீமதி நடேசனும் பக்கத்து வீட்டுப் பெண்களும் சேர்ந்து கொண்டு குய்யோ முறையோ வென்று கத்தினர்கள்!



ஆதிமூர்த்தி யொன்றுக்கும் பிரேக் போடவில்லை. ஏய்ரோப்ளேன் மாதிரி பாய்ந்துவிட்டார்.

* * *

ஆதிமூர்த்தியைத் தேடியவர் யார் தெரியுமா? ஆதிமூர்த்தி ஓடிப்போன சில நிமிஷ நேரத்திலெல்லாம் அந்த மனிதன் நடேச பிள்ளை மனைவியிடம் வந்து "அம்மா எனக்கு ஊர் திருப்பத்தூர். பெயர் மருதபாண்டியன். பீ.ஏ. படித்திருக்கிறேன். பத்திரிகைகளில் நல்ல பழக்கமுண்டு. சுமாராக எழுதவும் செய்வேன். இதற்கு முன் சென்னையில், 'நீதி ராஜ்யம், நித்யகல்யாணம், கோமளேஸ்வரன்பேட்டை' என்ற பத்திரிகைகளிலெல்லாம் சப் எடிட்டராக (உதவி யாசிரியாாக) வேலை பார்த்திருக்கிறேன். இப்போது கொஞ்சக் காலமாக வேலையில்லை. திரு. ஆதிமூர்த்திக்கு சப் எடிட்டர் தேவையென்பதாகத் தெரிந்தது. ஆதலால் அவர்களைப் பார்க்கவேண்டும். தயவு செய்து நான் காத்திருப்பதாகச் சொல்வீர்களா?" என்று கெஞ்சிக் கேட்டான். ஸ்ரீமதி நடேசன் ஒன்றும் புரியாது, "அதோ கொல்லைச் சந்து வழியாகப் போகிருரையா அவர்" என்ருர்.



'அதோ கொல்லைப் பக்கம் வழியாகப் போகிருர்'

உடனே பாண்டியன் விரைவாக நடந்து ஆதிமூர்த்தியைச் சமீபிக்கப் பார்த்தான். அப்போது ஆதிமூர்த்தியோ இரண்டு சந்து, மூன்று தெரு, நான்கு குளங்கள் முதலியவற்றைக் கடந்து ஒரு குதிரை வண்டியில் விசையாகப் போய்க்கொண்டிருந்தார். அவரது கண்கள் பிற்புறமே தூரதர்சினி வைத்து நோக்கிக் கொண்டிருந்தன.

பாண்டியன்—ஆம்—திருப்பத்தூரிலிருந்து 40 மைல் கடந்து, எங்கெங்கோ தேடிவிட்டு வந்திருப்பவனல்லவா? அவனுக்கு ஆதிமூர்த்தியை விட்டுவிட மனம் வருமா? ஆதலால் ஒரு சைகிலை எடுத்துக்கொண்டு, குதிரை வண்டியைப் பின்தொடர்ந்து பறந்தான். அதனைப் பார்த்தார் ஆதிமூர்த்தி! "ஐயோ! ஐ.டி. விடமாட்டான் போலிருக்கிறதே. குதிரை வண்டியை ஜயித்து விடுமல்லவா சைகில்" என்று நினைத்துக்கொண்டு, திடீரென, (வண்டிக்காரனுக்குச் சொல்லாமலே) கீழே குதித்துவிட்டார். நல்ல வேளையாக அங்கு ஒரு வாய்க்கால் ஓடிக்கொண்டிருந்தது. ஆதலால் இரத்த நஷ்டமில்லாது, நான்கு குட்டிக்காணம், இரண்டு படி தண்ணீர்ப்பான மாகிய வற்ருேடு மூழ்கினர். வண்டிக்காரன் ஏதோ சத்தம் வருவதைக்கேட்டுத்திரும்பிப்பார்த்தான்; சவாரிவந்த ஆளைக்காணவில்லை; அவனுக்குத் தன்னைப் பிடித்துக் கொள்ளக் கூடாதே. ஆளுக்கு என்ன வந்ததோ என்ற பயம். ஆதலால் நெடுகப் போய்விட்டான். அதேபோது நெருங்கிவந்த சைகிலும் மூழ்கிய ஆதிமூர்த்தியைக் காணுமல் கடந்துவிட்டது.

* * *

ஆதிமூர்த்தி—6-45 இருக்கும்; நல்ல இருள்; உடம்பெல்லாம் காயம்; நோவு—மெதுவாக வாய்க்காலைவிட்டு வெளிப்பட்டு ரோடில் ஏறி அசைந் தசைந்து நடந்தார். மானத்தால், இரத்தம் கசிந்த காயங்களோடு ஈரமான வேட்டியோடு



வழி நடக்கமுடியவில்லை. எனவே பக்கத்தில் சாக்கடைக்காக விடப்பட்டிருந்த ஒரு கால்வாய் ஓரமாக வழி நடந்து செல்லலாஞர். அப்படியேபோனல் பல வீடுகளின் கொல்லைப்புறச் சந்தாதலால் வைகை ஆற்றில் இறங்கிவிடலாமென்பது அவருக்குத் தெரியும். எனவே நல்ல இருளில், இடுங்கிய அச்சத்தில் தளர்ச்சியோடு போய்க் கொண்டிருந்தார் ஆதிமூர்த்தி—

அவர் போன விஷயத்தை, மாடு தப்பியவனுக்குச்செடியெல்லாம் கன் என்றபடித் திரியும்—வேலையில்லாத் திண்டாட்டச் சுழலில் அடிப்பட்டு நைந்தவனுகிய—பாண்டியன் அறிந்து, தன் சைகிலை மெதுவாக விட்டுக்கொண்டு மேற்படி சந்தில் வந்தான். ஒரு மூலையில்போனதும்—கெட்டகாலம் அவனுக்கும்!—சைகில் ஏதோ ஒரு மனிதன் மீது மோத இருவரு முருண்டு புரண்டு சைகிலோடு சாக்கடையில் வீழ்ந்தார்கள். பாண்டியனுக்கு நல்ல அடி!! என்ருலும் பைத்தியக்காரத்தனமாகத் தான் சைகிலை விட்டு ஒருவனை சாக்கடையில் தள்ளிவிட்டவருத்தம் பொறுக்கமுடியவில்லை. ஆதலால் ஒன்றும் பேசாது "சர்வ நாற்றத்தீர்த்த முழுக்கோடு" எழுந்திருந்தான். அப்போது அவன் செவிகளில் "அடபாவி! நொந்த மாட்டில் கோல் கொண்டிடிப்பதுபோல் புண்பட்ட என்னை சைகிலாலிடித்தாயே" என்ற சத்தம் விழுந்தது. அதில் புதைந்திருந்த வருத்தமும், ஈனத்தன்மையும் பாண்டியன் இருதயத்தை நேராகப் பிளந்துவிட்டன. நல்ல இருளாகையால் ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. சற்று நோத்தின்பின் அவ் உருவம் கரையிலேறிச் சோர்ந்து உட்கார்வது தெரிந்தது. அந்த வேளையில் பக்கத்து வீட்டுக்கார நாயுடு ஒருவர், தீனக்குரல் கேட்டு, ஒரு லைட்டுடன் வந்து, போர் புரிந்தவரிருவரையும் பார்த்தார். அந்த வெளிச்சத்தில் கண்டான் பாண்டியன் தான் சைகிலை ஏற்றியது ஆசிரியர் ஆதிநாதன் மீதென்று! அவ்வண்ணமே ஆதிநாதனும் தன் பக்கத்தில் நிற்பது ஐ. டி. ரங்கநாதமென்று தெரிந்துகொண்டார்—தெரிந்து கொண்டால் எப்படியிருக்கும்? "ஆ! ஆ" என்று கொலை செய்யப்படும் ஆடுகத்து கிறமாதிரி கத்தி "பாவி! இருளிலுமா கைதுசெய்யப் பார்க்கிருய்?" என்று கூக்குரல் போட்டார். அதனைக் கேட்டு அங்கு வந்தோர் புல்லோர். பாண்டியன் யாதும் புரியாதுதிகைத்து "ஐயா நான் கைதுசெய்ய வரவில்லை. தங்களைப் பார்த்துத் தங்கள் கிருபையைப்பெறவே வந்தேன். நான் மருதபாண்டியன். நீங்களிங்கு வந்திருப்பதை எம். கோபாலன். (கிளார்க்) மூலம் தெரிந்து, இன்றெல்லாம் தங்களைப் பார்க்கவேண்டுமென்று சுற்றியலைந்தேன். ஏதோ தவறுதலாக சைகில் மோதிவிட்டதால் மன்னிக்க வேண்டும்....." என்று பன்னிப் பன்னிக் கேட்டு, வணங்கினன். கூடிநின்ற ஜனங்கள் பார்த்துக் கொல்லென்று நகைத்தார்கள். ஆதிமூர்த்தி தம் கோழைத்தனத்தால் உதித்த முட்டாள் தனத்தால் ஏற்பட்ட உடல் நோவையும் அவமானத்தையும் தெரிந்து மெழுகாயுருகிச் சோர்ந்தார்.

* * *

பாண்டியனுதவியால் உடம்பைத் தேற்றிக்கொள்ள 15 நாள் பிடித்தது. அதற்குள்ளாகக் காந்தி—இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டதால் பிழைத்தார் ஆதிமூர்த்தி....இப்போது அவர் பத்திரிகையில்லை. திண்டுக்கல்லில் ஏகாந்த வாழ்க்கை நடத்துகிருர். பாண்டியனை மாத்திரம் நினைக்கும்போது பெருத்த அவமானம். தல்லா குளத்துக்கு வருவதில்லை.



அகமதாபாத்தில் மகாத்மா காந்தி ஓர் தொழிலாளர் கூட்டத்தில் பேசினர்.

படத்தில் குழுமியிருந்த கும்பலின் ஒரு பகுதி காணப்படுகின்றது.

—S.P.B.

ஒரு ஜெர்மன் உடற்கூற்று வல்லுனர் இரவு எட்டு மணிக்குப் படுக்கை புகுந்து மூன்று மணிக்கு எழுந்திருப்பவர் நல்ல ஆரோக்கிய முடையவரா யிருக்கின்றனரென்று கண்டுபிடித்திருக்கிருர்.

* * *

அமெரிக்கச் செம்படவர்கள் பாதம் முதல் முழங்கால்வரையிலும் ஒரு இரும்புக் குழாயைப் போட்டுக்கொள்வதன் மூலம் இராக்காலங்களில் மீன் பிடிக்கும் போது விஷப் பாம்புகள் தீண்டிவிடாது காத்துக் கொள்கின்றனர்.

* * *

அமெரிக்காவில் குளிர்காற்றுப் பெட்டியொன்று உபயோகிக்கப்பட்டு வருகிறது. இதனைப் பிரயாண காலங்களில் கையிலும் எடுத்துச்செல்லலாம். சூடான காற்றை இது ஏற்றுக்கொண்டு குளிர்ச்சி செய்து வெளிவிடுகின்றது.

* * *

கெட்டுப்போன "பீர்" சாராயத்தில் கொஞ்சம் சாக் (சீமைச் சுண்ணும்பு)ப் பொடியை தூவுவதன் மூலம் சுத்தம் செய்து கொள்ளலாம். சற்றுப்பொடி செய்யப்பட்ட அடுப்புக் கரியும் உதவுமென்று சொல்லப்படுகிறது.




## இன்ஸ்பெக்டர் மனைவி

(இ. சிவம்.)

திருச்சி
5-6-1934.

அன்புள்ள ரங்கநாதம்,

நலம் ; நலமோங்குக. உன் கடிதம் கிடைத்தது. நண்பர்கள் அனைவரும் க்ஷேமம். இந்தக் கடிதத்தில் நான் சமீபத்தில் கற்றுக்கொண்ட ஒரு பாடத்தைக் கூற விரும்புகிறேன்.

நண்பா ! நான் உனக்கு வழக்கமாகக் கடிதமெழுதத் தொடங்குமுன்பு—அதாவது 1930 முதல் 1934 வரையிலும்—நானும் மீனாட்சியும் எப்படி வாழ்ந்து வந்தோமென்பது உனக்குத் தெரியுமா? நீ சற்று நேரம் அடியில்வரும் காட்சியை நினைத்துக்கொள்:—

ஒரு சமையல் அறை. எங்கும் உடைந்து, நொறுங்கி, உருக்கெட்டுப்போன பாத்திர பண்டங்கள். அவற்றிலிருந்த சாதம் குழம்போடு சேர்ந்து தரையில் போட்டிருக்கும் கோலங்கள் பல. அவற்றினிடையே ஒருவன் சகுந்தலா நாடகத்தில் துர்வாசர் தோற்றியபோல கரிந்த முகத்தில், எரிந்த தோற்றத்தில், பிரிந்த நிலைமையில், திரிந்த சொல் பல பிதற்றி அங்குமிங்கு மலைகின்றான். அவனுக்குப் பயந்து அவ் அறையின் ஓர் மூலையில் ஒரு பருவ மங்கை அழுது புலம்பிக் கொண்டிருக்கின்றாள், அவளுக்கு, இடையிடையே, மிதி, அடி, உதை, வசவு முதலியவை கிடைக்கின்றன. இப்படிப்பட்ட ஒரு சீனை நீ பார்த்திருந்தால் நான் எவ்வாறு இல் வாழ்க்கை நடாத்தினேன் என்பது தெரியும். ஒரு நாளாவது மனைவி மீனாட்சியுடன் நான் இனித்த் வார்த்தை பேசியதில்லை.

இதன் காரணம் என்ன? மீனாட்சி ஒரு கெட்ட பெண்ணா? அன்று. எனக்கு—எக்காரணம் பற்றியோ—இல்லை. கையிலிருக்கும் பொருள் சிலருக்கு இனிக்காதல்லவா? அதுவேதான் காரணமா யிருக்கவேண்டும்—எனக்கு மீனாக்ஷியைப் பிடிக்கவில்லை. அதற்குப் பதிலாக தெருவிலுள்ள பல பெண்களையும் தாசிகளையும் பார்த்து வாய் பிளந்தேன். என் கண்கட்கு அவர்களிடமெல்லாம் மீனாக்ஷியிடமில்லாத எதுவோ ஒரு வசீகர சக்தி சேர்ந்திருப்பதாகத் தோற்றிற்று. ஆதல்பற்றித்தான் நான் மீனாக்ஷியை வெறுக்கவும், அடிக்கவும், உதைக்கவும், மிதிக்கவும், வையவும், இகழவும், பழிக்கவும், எளனம் செய்யவும் செய்தேன் என்று மேலே ஒரு சீனைக் காண்பித்தேன். ஐயோ ! நினைத்துனையாவது என் செயல் அடாதென்று நான் நினைத்தேனில்லையே........எனினும் ரங்கநாதம் ! என் மீனாக்ஷி, வாடி வதங்கிக் கலங்கிப் புழுங்கி யிருந்தாலும், மனதைத் தேற்றி, முகத்தில் சந்தோஷமிருப்பதாகக் காட்டிக்கொண்டு, தனது அழகைப் பெருக்கிக் காண்பித்து, நான் எப்படியும் பார்த்து மனமிரங்கி விடும்படியாக, என் முன்னால், ஜன்னலோரத்திலும், வாயிற்படியிலும், அறை நடுவிலும் நின்றும், மெதுவாகக் கடைக் கண்ணால் என்னை நோக்கியும், கனைத்தும்—ஏன் சிலகால் கண்ணீர் சிந்தியும்—எவ்வளவெவ்வளவோ பார்த்தாள்! சிலகால் நான் தனியாக விருக்கையில் என்னிடத்தில் வந்து எஜமானனைச் சுற்றி வரும் நாய்போல் கெஞ்சி 'நான் என்ன தவறு செய்கிறேன். ஒருநாளாவது மனமிரங்கிக் கூறினால் அதனைத் திருத்திக்கொள்ளமாட்டேனா ; (—மிகப் பணிவாக—) மாணிக்கத்தை விடவும் கோகிலத்தை விடவும் நான் என்ன வழியில் குறைந்து விட்டேன்' என்று கேட்டிருக்கிறாள்.

சிலகால் காலைப் பிடித்தும் என்பாதத்தின் முன்னால் படுத்துச் சத்தியாக்கிரகம் செய்தும் பார்த்திருக்கிறாள் ! அந்த வேளைகளிலெல்லாம் நண்பா ! நான் காந்திஜியைக் குண்டாலடிக்கும் தயாளமூர்த்தியின் பெருந்தன்மை கொண்டு—ஹிந்து மதத்தில் எல்லோரும் கொடுமை பொறுக்க முடியாமல் பிறமதம் புகுந்துவிட்டாலும் தீண்டாமை யொழியக் கூடாது என்று சொல்லும் காசி சனாதன சிகாமணியின் மனப்பான்மை கொண்டு—கேலப்பனிறந்தாலும் குருவாயூராலயம் திறக்கப்பட மாட்டாது என்ற சமூதிரியின் மனோநிலை கொண்டு—யுகம் புரண்டாலும் இந்தியருக்குச் சுயராஜ்யம் வழங்கலாகாதென்ற ஸ்ரீலஸ்ரீ சர்ச்சிலின் பெருமதிகொண்டு—மீனாட்சியை உதைத்துப் புரட்டிவிட்டு அப்பால் சென்றிருக்கின்றேன். பன்முறை அவள் கைகால்களில் காயம்பட்டும் இரத்தம் சிந்தியும் உடல்வேதனை யடைந்தும் துன்புற்றிருக்கின்றாள். என்றாலும் நான் "ஹிட்லரிய"த்தைக் கைவிடவில்லை ; என் தண்டவாளத்திலேயே ஓடிக்கொண்டிருந்தேன். கொஞ்ச நாளையில் பல மைனர்களிடத்திலும், பாங்கர்களிடத்திலும், ரஜிஸ்திரா ராபீசுகளிலும், மாமாக்களிடத்திலும் எனக்குப் பழக்கமும் பேரும் அதிகரித்தன. சாராயக் கடைகள் சிலவற்றிலும் காபி ஹோட்டல் பலவற்றிலும் ஓர் "கஸ்டமர்" ஆனேன். அன்றி மதுரை ராஜாம்பாள், திருப்புத்தூர்க் காந்தாமணி, உள்ளூர் விக்டோரியா, திருக்கோகர்ணம் அம்புஜம், விராலிமலை நாகவேணி, புதுக்கோட்டை அஞ்சலை முதலியோர்களின் பொக்கிஷமு மாயினேன். இவர்கட்காக நான் செலவிட்ட பணத்தைப் பார்த்தால், நாடகத்தில் வரும் கோவலன் சரித்திரம் உண்மையென்றே தோற்றும். ஆ ! அக்காலத்தில்—சுமார் மூன்றரை வருடம்—ஒரு வாரமாவது வீட்டுக்கு வந்ததுண்டா ? எப்போதாவது வந்தால் சில மணி நேரங்களிருந்து விட்டுப் போய்விடுவேன். அதனால் மீனாக்ஷியின் உருவம்கூட மறந்து போயிற்று !

இவ்விதமான என் வாழ்க்கையைப் பார்த்து உற்றாருறவினரும், பெற்றோர் பெரியோரும், அற்றாரகன்றோராகி விட்டார்கள். பல நண்பர்கள் "மீனாட்சியோடு கூடிவாழ்" என்று சொல்லவந்து என் நெற்றிக்கண்ணுக் காளாகிவிட்டார்கள். மீனாக்ஷியின் சகோதரர் ராமசாமி என்னிடம் தங்கைக்காக "டிப்யுடேஷன்" வந்து எரிச்சலோடு திரும்பிப் போன தருணம் பல. ஒருமுறை கோவலனாகிய எனக்காக மீனாக்ஷியாகிய கண்ணகி தவம்கிடப்பதைக்கண்டு, திரு. ராமசாமி சில வார்த்தைகள் சொல்வதற்காக என்னைத் தேடிவந்தார். நண்பா ! என் போன்ற ஒருவன் இப்படிக் கண்டபடி போனானால் ஏன் மனைவி தவம் கிடக்க வேண்டும் ? ஏன் அவளும் கண்டபடி நடந்து புருஷனுக்குப் புத்தி புகட்டக் கூடாது? போகட்டும்.

திரு. ராமசாமி என்னைத் தேடிவந்த போது நான் திருக்கோகர்ணம் அம்புஜத்தின் வீட்டிலிருக்கிறேன். அன்று நடுப் பகலில் சாப்பாட்டின் பிறகு நானும் அம்புஜமும் "ஔட்" என்ற சீட்டாட்டத்தில் புகுந்தோம். சற்று நேரமாடியதில் நான் தோல்வியுற்றேன். தோல்வியுற்றவர்மீது, எங்கள் ஒப்பந்தப்படி வெற்றி கொண்டவர், எதுவும் செய்யலாம். ஆகவே அம்புஜம் என்னைக் கேலி செய்வதற்காக, என்னைக் குதிரையாக்கி முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டு சவாரி செய்தாள். இடையிடையே யானைப் பாகன் செய்வது போலக் காலால் மெதுவாக உதைத்து நடக்கும்படித் தூண்டிக்கொண்டு என் வாயில் சாடொன்றைப் போட்டுக் கடிவாளமாகப் பிடித்தும் கொண்டாள். நண்பா ! அம்புஜம் கொஞ்சம் கனமான ஜாதி ; என்னைப்போல் ஒன்றேமுக்கால் பங்கு பருமனிருப்பாள். ஆதலால் சுமக்க என்னால்கூடவில்லை. பத்திரிகைகள்மீது ஏறி இருக்கும் சட்டங்களையொத்திருக்கும்; அவள் என்மீது ஏறி உட்கார்ந்திருந்த விதம்.

இந்தத் தருணத்தில்தான் வந்தார் ஒரு ஜன்னலண்டை திரு. ராமசாமி ! ஆ ! எவ்வாறு எரிந்திருக்கும் அவாது வயிறு! சொந்தத் தங்கையைக் கட்டி யிருக்கும் ஒருவன், கிளிபோன்ற அவளை விட்டு விட்டு, ஒரு எருமைமாட்டுத் தாசியைத் தூக்கிச் சுமப்பதைப் பார்ப்பதென்றால் எவன்தான் சாந்தமுறுவான்? ராமசாமி "அட கழுதையே ! அன்னத்தைத் தள்ளிவிட்டு இந்த எருமையைச் சுமக்கு முனக்கா கட்டித் தந்தோம். இனி உன்னைக் கண்ணாலும் பார்ப்பதில்லை".


அம்புஜம் என்னைக் குதிரையாக்கி முதுகில் உட்கார்ந்துகொண்டாள்.

என்று காறியுமிழ்ந்துவிட்டுப் போய் விட்டார். பார் நண்பா! அவர் போட்ட கூச்சலைக் கண்டதும் அம்புஜம் இரண்டு மணி நேரமாக அழுதாள். நான் 23 பவுனில் ஒரு தங்கக் குதிரை தருவதாகக்கூறி, எவ்வளவோ கெஞ்சி, அவளைச் சமாதானப் படுத்தினேன். இப்படி நான் செய்த திருவிளையாடல் பல. என்றாலும் சொந்தப் பொருளாகிய மீனாக்ஷி எனக்கு ருசிக்கவில்லை.

* * *

இப்படியிருக்க ஒருநாள் நான் "சான்சாக"க் கணக்கை யெடுத்துப் பார்த்தேன். சுமார் ஒரு லட்சமும் சில ஆயிரங்களும் காலியாகி யிருந்ததாகத் தெரிந்தது. சற்று யோசித்ததில் சுமார் ஆறு மாதம் முன்னிருந்த "ரேட்டில்" (விகிதத்தில்) செலவு செய்தால், நானே காலியாகி விடுவேன்போல் தோற்றிற்று. அப்பொழுது ஒரு நண்பர் "அங்குமிங்கும் தாசி வைத்திருப்பதைவிட வகையான ஒரு பெண்ணோடு வாழ்ந்தால் பிழைத்தாய்" என்றார்; அது கொஞ்சம் சரியென்றுபட்டது. ஆகவே ஒருநாள் எவருக்கும் தெரியாது திருச்சிக்கு வந்து அங்கு தங்கலானேன். இந்த விடத்தில் நண்பா! நான் மீனாவையும் தாயையும் சுற்றத்தாரையும் பார்த்துப் பல மாதங்களாகி விட்டனவென்று நீ தெரிதல் வேண்டும்.

* * *

திருச்சியில் கள்ளத் தெருவில் தங்கத் தொடங்கிய நான் ஒரு பெண்ணை யடையும் முயற்சியில் ஈடுபட்டிருந்தேனென்பது ஒருவருக்கும் தெரியாது. கள்ளத் தெரு என் லக்ஷியத்திற்கு சாலவும் பொருந்தியதாகும். அதில் நான் அங்குமிங்கும் நடந்தபோதெல்லாம் என் குறிப்பைத் தவறாது மனதில் வைத்துக் கொண்டேன். ஒருநாள் தற்செயலாய் என் எதிர் வீட்டில் சுமார் ஒரு மாதமாக—அதாவது நான் வந்த 15-ம் நாள் முதல் தங்கிவரும்—பெண்ணின் பார்வை என் பார்வையை உதைத்துத் தள்ளியது. தள்ளியதும் எனக்குள்—மகா கெட்ட எண்ணம்! என்றாலும்—அவளை மெதுவாய் அடைய முயன்றாலென்ன வென்று பட்டது. உடன் வீட்டுக்கு வந்து பலநாள் அடைத்திருந்த ஒரு ஜன்னலைத் திறந்து என் பார்வைக்கு வழி விட்டேன். ஒரு நாற்காலியையும் அதன் சமீபத்தில் பிரதிஷ்டை செய்தேன்.

இந்தப் பெண் நல்ல அழகானவள். வயது சுமார் 23 இருக்கும். பணக்காரி போலிருக்கிறது—நன்றாக உடுத்தி அணிகலணிந்திருந்தாள். அவளையும் ஒரு வேலைக்காரியையும் தவிர வேறு யாருமில்லை. அவ்விருவரையும் கோயமுத்தூரிலோ—எங்கேயோ எனக்கு ஞாபகமில்லை—பார்த்திருக்கிறேன். விசாரித்ததில் அவள்—இல்லை அவர்—ஓர் போலீஸ் இன்ஸ்பெக்டரின் மனைவியென்றும், புருஷன் திருச்சிக்கு மாற்றப்பட்டிருக்கின்றாரென்றும், அவர் வருவதற்கு முன்பு தமக்குத் தெரிந்த வீட்டைச் சித்தம் செய்வதற்காக வந்திருக்கின்றாரென்றும் கேள்விப் பட்டேன். ஆ! ஒரு இன்ஸ்பெக்டரின் மனைவியையா துராக்கிரகம் செய்வது? இருந்தாலும் நான் விடவில்லை; முயன்றேன். சில நாட்களில் அவர் என்னை நோக்கி அடியெடுத்து வைப்பதுபோல் தோற்றிற்று. ஆனால் ஒரு நாளாவது நேரில் பேசவேண்டாமா? அதற்கு எப்படித் தருணம் கிடைக்கும்?

நான் ஒருநாள் மாலையில் ஸ்ரீரங்கம் செல்வதற்காக "டிரஸ்" செய்து—எல்லாம் ஜென்னலோரம் தான்—தயாரானேன்—ஆ! என்ன ஆச்சரியம்! அவரும்—என்னைப் பார்த்துத்தான் போலிருக்கிறது—உடன் நன்றாக—என் இருதயத்தை நூலாகத் திரித்து நெசவு செய்து புடவையாக்கிக் கட்டிக்கொண்டாற்போல ஆடையுடுத்தித் தயாரானார். என்ன புதுமை! என்னை, சந்தேகம், சந்தோஷம், மயக்கம், தயக்கம், தளர்ச்சி, எழுச்சி யெல்லாம் ஏகமாகப் பொங்கி மூடின.

* * *

அப்போது ஒரு ஜட்கா வண்டிக்காரன் வந்தான். அவனிடம் ஸ்ரீரங்கம் போகவேண்டுமென்று சொல்லிக் கூலி பேசினேன். அவன் 8 அணா வேண்டினான். திருச்சியிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு 4 அணா என்பது உலகப் பிரசித்தம்! ஆதலால் நான் மறுத்துவிட்டு அவனைப் போக விட்டுவிட்டேன். உடன்—ஆம் நான் போகும் குறிப்புத் தெரிந்து கொண்ட இன்ஸ்பெக்டர் மனைவி. என் கன்னத்திலறைந்தாற்போல, என்னைக் கடைக்கண்ணால் நோக்கிப் புன்னகை புரிந்துவிட்டு, அதே வண்டியில் எட்டணா பேசி ஸ்ரீரங்கம் சென்றார். செல்கையில் வேலைக்காரியிடம் "அடி! ஒன்பது மணியாகும் நான்வர; ஜாக்கிரதையாயிரு" என்று கூறினர்.

நான் கொடுக்க மறுத்த சத்தத்தை (8 அணாவை) என் முன்னால் அவர் கொடுப்பதென்றால் என்னை அவமானப் படுத்துவது அல்லவா? நான் உடன் நிர்ஜீவனாகி விட்டேன்—ஆனால் அவர் என்னைப் பார்த்துப் புறப்பட்டதும், நான் சொன்ன விடத்துக்குச் சென்றதும், என்னை நோக்கிச் சிறு புன்சிரிப்புத் தூவியதும், யாவும் அவசியமோ! ஒழுங்கோ! இன்றி, இரவு திரும்பிவர 9 மணியாகுமென்று சொன்னதும் சேர்ந்து என் மனதிற்குள் ஒரு பெரிய மகாநாட்டைக்கூட்டி, தஞ்சை காண்பெடரேஷன் போல நடைபெற்று, நீண்டவாதம் செய்து, கடைசியில் ஏகமுகமாக "என்னைக் குறிவைத்துத்தான் ஸ்ரீரங்கம் சென்றார்" என்ற தீர்மானத்தை நிறைவேற்றின. எனவே நான் விரைந்து ஸ்ரீரங்கம் சென்றேன். அங்கு அவர்—ஆம்—மெதுவாக, யாதும் குறியற்று, பிராகாரங்களைச் சுற்றிக்கொண்டிருந்தார். ஆ! அவர் நடை, சாயல், பார்வை என்னை எவ்வளவு இழுப்பு இழுத்தன!

நானும் அங்குமிங்கும்—மேலும்கீழும் வலப்புறமு மிடப் புறமும்—கிறுக்கன் மாதிரி—பக்தி வெள்ளத்திலாழ்ந்தவன் போல—பலமுறை அவரை நெருங்கி, நோக்கி, கடந்து, நடந்தேன். அவர் அப்போதெல்லாம் என்னைப் பார்த்த மாதிரியில் துணிந்து பேசிவிடலாம் போல் தோற்றிற்று.

அப்படியிருக்க, சுமார் 8 மணிக்கு அவர் ஆயிரக்கால் மண்டபத்தண்டை வந்தார். அவரே குறியாக இயங்கும் நிழலாகிய நான், அவரை யண்மினேனென்று சொல்லவா வேண்டும்? நான் ஒரு மூலையில் போனதும் "அம்மா 8 அணா ஜாஸ்தி; நான் நான்கணாவை உத்தேசித்து மறுக்கவில்லை. அப்படி ஜட்கா வண்டிக்காரனிடம் நடந்துகொள்வது பிசகு என்பதே என் உத்தேசம்" என்றேன். அதற்கவர் யாதும் மாற்றம் காண்பியாது சென்றுவிட்டார்.

* * *

இரவு 9-க்கு அவர் தம் அறையில் தனியாக உட்கார்ந்திருந்தார். நான் உண்டு உறங்கப் போனாலும் உறக்கத்தின் கருணை வாவில்லை. மேலும் இருதயமோ "என்ன வந்தாலும் வரட்டும்;



ஒரு கைபார்" என்று அடித்தது. ஆசை இருதய மோட்டாரின் "ஸ்டீயரிங்கை"ப் பிடித்து நகர்த்தியது—அதிகமேன்! நான் என் வீட்டைவிட்டு வெளிப்பட்டுத் திறந்திருந்த(!) கதவு வழியாக இன்ஸ்பெக்டர் மனைவி அறையை அடைந்தேன்! அவர் நாற்காலியி லுட்கார்ந்த வண்ணம் திகைத்தார். நான் பாதத்தில் விழுந்து கெஞ்சினேன்.




நான் பாதத்தில் விழுந்து கெஞ்சினேன்; அவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆ! "என் இருதயமே! என் உயிர் காக்கும் கொழுந்தே! நான் எவ்வளவு தப்பிதம் செய்தாலும் பொறு..............அடக்க முடியாமையினால் நைகின்றேன்......." என்று நான் சொன்ன சொற்கள் ஆ! ஆ! கோடி! கோடி!! கோடி!!!

அதற்கு அவர்:—ஒருவர் மனைவி இன்னொருவரை நாடுவதென்றால் சீ! சீ!!..........உம் மனைவி தவறி நடந்தால்!...............?

நான்:—என் மனைவி தங்களைப் போலிருந்தால்—நான் இப்படி வருவேனா? அழகுதானே மனிதனைக்கெடுக்கிறது; இழுக்கின்றது?

அவர் நகைத்தார்! பின் "நான் அழகாயிருக்கிறேன்; உம் மனைவி அவலட்சணம்!..........அதற்காக நான் ஒழுங்கு தவற வேண்டும்!....நல்ல அழகு" என்றாள். நான் மேலும் கெஞ்சி வணங்கினேன்; நெருங்கினேன்!

அதற்கவர் என்னை ஒரு நாற்காலியைப் பார்த்து வணங்கச் சொல்லி அதனை 12 முறை சுற்றி வரச்சொன்னார். நான் "ஏன் அவமானப் படுத்த வேண்டும்—என்னைச் சோதிக்க இதுவா வழி" என்று கூறிக்கொண்டு அவர் ஆணைப்படி நின்றேன்.

அவர்:—ஒருகால் இந்த விஷயம் இன்ஸ்பெக்டருக்குத் தெரிந்து அவர் என்னைக் கை விட்டு விட்டால், நீங்கள் காப்பாற்றுவீர்களா? அல்லது என்னையும் அழகில்லை யென்று கூறி விட்டு வேறொரு பெண்ணை.......

நான்!— இல்லை இல்லை.

அவர்:—காகிதத்தில் எழுதிக்கொடும். ...........எழுத வேண்டிய வாக்கியம்; "நீங்கள் என் மனைவியை விட மிகவும் அழகு; ஆதலால் காதலிக்கிறேன். உங்கள் புருஷன் கை விட்டால் நான் காப்பாற்றி வா—காதலனை விருந்து—மறுப்பதேயில்லை".

நான் எழுதினேன்—எழுதியானதும் அவர் "பாட்டி பாட்டி பாருங்கள் உங்கள் பேரன் படும் பாட்டை" என்று கத்தினார். உடன் வேலைக்காரி ஓடிவந்து விழுந்து விழுந்து நகைத்தும் கொண்டு "தம்பி! பாலசுந்தரம் மீனாக்ஷி வேண்டாம்! இந்தப் பெண் வேண்டும்; அல்லவா? இவள் யார்? காரைக்குடியில் உதைத்துத் தள்ளியது போக இங்கு சொன்ன மாதிரிக் குட்டிக்கரணம் போடுகிறீரே? சொந்த மனைவியைவிடப் பிறன் மனைவி யென்றால் இனிப்போ?" என்றாள்.

நான் விழித்து 'நீர் யார்' என்றேன். "நான் அரியக்குடி லட்சுமி! செல்லையா அம்பலகாரர் சகோதரி, உங்கள் மனைவி மீனாக்ஷிக்குத் துணையாக வந்தேன். ஆறு மாதமாகச் சாப்பிடவும் தூங்கவும் கூட மாட்டேனென்றாள். தாயார் தகப்பன், ராமசாமி யெல்லாம் எப்படியாவது போகட்டு மென்று கைவிட்டு விட்டார்கள். .....................நீங்கள் இங்கு திருவிளையாடல் செய்கிறீர்கள் என்பது தெரிந்தது. உடன் வந்தோம்" என்றார் கிழவி.

நான் நடுங்கி அவர்களுக்குக் கோயமுத்தூர் என்றது பிசகென்று நினைந்து ஏங்கி விழுந்தேன்........................இப்போது நண்பா! என் பாடம் முடிந்து விட்டது—மீனாக்ஷியைப் பணிந்து தொண்டு செய்தாலும் தகும்—இன்னும் சில நாளையில் காரைக்குடிக்குச் சென்று விடுவேன். என் ஆசை மீனா அழகுக் கட்டியாகத் தோற்றுகிறாள்—என்னை மன்னித்தும் விட்டாள்! அவளைப்போல் ஒரு அருமணியும் என்னைப்போல் ஒரு ஒரு முழு முட்டாளும் கிடைப்பார்களா? வணக்கம்.

என்றும் அன்புள்ள,
பாலசுந்தரன்.

---

## 40 கோடி மைலுக்கப்பால் புயல் காற்று.

கிலீவ் லாண்டு வான சாஸ்திர கலாசாலைப் பண்டிதரான ஜெ. ஜெ. நாசோ என்பவர் புதகிரகத்தில் 20 ஆயிரம் மைல் நீளமும் 2 ஆயிரம்மைல் அகலமுமுள்ள ஓரிடம் முழுதும் பெரிய புயல் காற்றால் துன்பப் படுத்தப்படுகின்றதென்று கண்டுபிடித்திருக்கிறார். புதன் நம்மை விட்டு 40 கோடி மைல்கள் அகன்றிருக்கிறது. அதன் குறுக்களவு 88 ஆயிரம் மைலாகும். நம் சூரியனைச் சுற்றிப் பிரயாணம் செய்துகொண்டிருக்கின்ற கிரகங்களில் மிகப் பெரிது அதுதான்.

---

**தீண்டாமை ஒழிக!**

# அறிவியல் வளர்ச்சி

## ஆகாயத்தில் கோட்டை

புராணங்களில் ராக்ஷசர்கள் ஆகாயத்தில் கோட்டை கட்டி வான்படையெடுப்பைத் தடைசெய்தார்கள் என்று சொல்லப்படுவது போல லண்டன் மாநகரம் ஆகாயத்தில் பாதுகாப்புத்தேட ஆரம்பித்திருக்கிறது. அதற்கு யுத்தமேற்பட்டால் ஆகாயத்திலிருந்து குண்டுமாரிகளும் விமானங்களும் விழுமென்பது தெரியும். எனவே பிரிட்டிஷ் ஆகாயப்படை மந்திரி சபை வானத்தில் அரண்கட்ட நிச்சயித்துள்ளது. வலை போன்று அமைந்த உருக்குக் கம்பிகள் பல மைல் தூரம், பல ஆயிர அடிகட்கப்பால், தொங்க விட்டுவிடப்படும். அதில் மோதுகின்ற எந்த விமானமும் தவிடு பொடியாய்ப் போகும். இந்த உருக்குக் கம்பி வலையை எவ்வாறு அமைக்கலாமென்று தீவிரமான யோசனை நடைபெற்று வருவதோடு, சில நிபுணர்கள் சொல்லும் யோசனை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படுகிறது. இவ்வித ஆகாயக்கோட்டை மிகுந்த செலவாக முடியுமென்பதில் சந்தேகமில்லை.

## வானில் மிதக்கும் வெடிக் குண்டு

பூமி ஓயாது மேற்புறமிருந்து கீழ்த்திசையை நோக்கிச் சுற்றிக்கொண்டிருக்கிறது. ஆகவே வானிலெழும்பி நின்று ஒரு குறிப்பிட்ட பட்டணத்தை ஒரு குறிப்பிட்ட நேரத்தில்—உதாரணமாக 10 மணிக்கு—நோக்கினால் 11-வது மணியில் அதனை முன் கண்டவிடத்தில் காண முடியாது. சற்றுக் கிழக்கு நீங்கியே தெரியும். இதேமாதிரி ஒருவன் ஒரு கல்லைச் செங்குத்தாகப் பல மைல் தூரம் வானிலுயர்ந்து செல்லும்படி எறிந்தானானால் அது எழும்பிய இடத்தில்வந்து வீழாது சற்று மேல் திசையிலேயே வந்துவிழும். இத்தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டு லண்டன் விஞ்ஞான நிபுணர் ஒருவர் ஒரு புதிய வெடிக்குண்டைக் கண்டுபிடித்திருக்கிறார். அது "ஊட்" என்ற வாணத்தைப் போன்றது. அதனை ஆகாயத்தை நோக்கி எறிந்துவிட்டால் அங்கு சென்றதும் வெடிக்கும். வெடித்தவுடன் அதிலிருந்து வேறொரு குண்டு எழும்பி மேற்செல்லும். அதுவும் சற்று நேரத்தின்பின் வெடிக்கும்போது அதிலிருந்து மற்றொரு குண்டெழும்பி மேலே பாயும். இங்ஙனம் வெடித்துக்கொண்டும் வானத்தில் பல மணி நேரம் பறந்துகொண்டுமிருப்பதால் முதலில் எந்த நகரம் எறிந்ததோ அந்த நகரத்தில் அது விழ்ந்துவிடாது. இதனையொரு கணக்காக வைத்துக்கொண்டு பிற நகரங்களை அழிக்கப் பார்க்கிறார்கள் ஆங்கிலேயர்கள். சமீபத்தில் இதனைச் சோதனை காண்பித்தார்களாம். இவ்வாறு செய்வதானால் பிறநகரங்களைப் பார்த்துக் குண்டு போடாது வானத்தைப் பார்த்தே குண்டு போட்டுவிடலாம்!

## முட்டைகோசிலிருந்துபஞ்சு.

இங்கிலாந்தில் சௌத் போர்ட் என்ற துறைமுகத்திலிருக்கும் ஓர் விஞ்ஞான நிபுணர் பருத்திச் செடி வளர்க்காமல் பஞ்சு செய்யும் வழியொன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். அவர் ஏராளமான நூலை முட்டைக்கோஸ் செடியிலும் மரப்பொடியிலுமிருந்து எடுக்கிறார். அந்நூல் உண்மையான எகிப்தியப் பஞ்சு நூலைப் போலவே இருக்கிறது. சமீபத்தில் ஒரு நூல் பரிசோதகரிடம் முட்டைக்கோஸ் நூலைக் கொடுத்தபோது நன்றாகப் பரிசோதனை செய்து பார்த்துவிட்டு எகிப்தியப் பஞ்சு நூல் என்று கூறினாராம். இவ்வளவு நேர்த்தியான செயற்கை நூலின் விலை அமெரிக்க எகிப்திய நூலின் விலையில் பாதிதானாகுமாம். எனவே இங்கிலாந்து நூல் வியாபாரத்தில் சற்றுத் தலையைத் தூக்கலாமென்று நினைக்கிறது. லங்காஷயார் வியாபாரிகளும் மில் முதலாளிகளும் மனமகிழத் தொடங்கி விட்டார்கள்!

## புதிய கொலைக் கருவி

பண்டித பெர்னி என்ற யௌவன இத்தாலிய பண்டிதரொருவர் தொண்ணூற்றி மூன்றாவது "சக்தி" ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். இதன் இயல்பினை அறிந்த விஞ்ஞான, ரசாயன, தத்துவ சாஸ்திரிகள் அனைவரும் நடுநடுங்குகின்றனர், ஏனெனின் இந்த அரிய சக்தியை யுத்தங்கட்கு உபயோகிக்கத் தொடங்கி விட்டார்களானால் (இத்தாலியர்) உலகையே நொடிப் பொழுதில் மாய்த்து விடுவார்கள். பிரக்யாதிபெற்ற பிரிட்டிஷ் சாஸ்திரியான A. M. லோ வென்பவர் கூறுவதாவது:—

இந்தப் புதுச் சக்தியை மிகப் பயங்கரமான பெரிய காரியங்கட்கெல்லாம் உபயோகிக்கலாம். முதன் முதலில் இதனால் மனிதனுக்குத் தேவைப்படுகின்ற எல்லா இயந்திரங்களையும் இலகுவில் ஓட்ட முடியும். இச்சக்தியால் வேலை செய்யும் இயந்திரங்கள் மனிதனின் மனோவாக்குக் காயங்கட்கு எட்டாத அவ்வளவு வேகத்தில் இயங்கும். இந்தச் சக்தியால் ஓட்டப்படுகின்ற விமானங்களால் அட்லாந்திக் மகா சமுத்திரத்தை (4000 மைல்) ஒரு மணி நேரத்தில் கடந்துவிட முடியும். இந்தச் சக்தியைத் தெரிந்திருப்பவனால் எந்தக் கண்டத்தையும் ஒரு நொடியில் அழித்துவிட முடியும். ஒரு விநாடியில் ஒரு பெரிய நகரத்தைத் தூளாக்கிவிடவோ, பெரிய சேனையை மண்ணோடு மண்ணாய்த் தோய்த்துவிடவோ, பீரங்கிகள், போர்க் கப்பல்கள், ஆகாய விமானங்கள், நீர் மூழ்கிக் கப்பல்களாகியவற்றைச் சாம்பலாக்கிவிடவோ இந்தப் புதிய சக்தியால் ஏலும்.

## எதிர்கால உலகம்?

சிகாகோ நூற்றாண்டு முன்னேற்றக் காட்சியைத் திறந்து வைப்பதற்குமுன் நடந்த ஒரு விருந்தில் ஜெனரல் மோட்டர்ச் சங்கத்தின் தலைவராகிய மிஸ்டர் அல்பிரெட் பி. ஸ்லோன் கூறியதாவது:-

எதிர் காலத்தில் மின்சாரத்தைச் சூரியவொளியிலிருந்து பெற்றுக்கொள்வதால் மோட்டார்கள் செலவின்றித் தானாகவோடும். விமானங்கட்கு சக்தியளிக்கும் ஸ்டேஷன்கள் பூமியிலேயே அமைந்திருக்கும். தொத்து நோய்கள் யாவும் நிர்மூல நாசம் செய்யப்படும். அன்றி மனிதர்கள் 70 வயது வரையிலும் வாழ்வார்கள். வீடுகள் வலைகளால் கட்டப்படும். அணுக்களையும், உயிர்க் கிரணங்களையும் அடக்கி அவற்றைத் தங்கட்கு வேண்டிய 'பவர்'களாக மனிதர் உபயோகித்துக் கொள்வார்கள். உயிருள்ள (cell) முட்டைகளைச் செயற்கையாகவே செய்யலாம். உலகம் எவ்வாறு படைக்கப்பட்டது, அதன் இயல்பு என்ன, அதன் பரப்பு எவ்வளவு என்ற தத்துவங்கள் மனித அறிவை எட்டும்.





# ராஜ பக்தர்கள் கூட்டத்தின் ரகசியம்

## இந்தியா மந்திரிக்கு நோட்டீஸ்

அமிர்தசரசிலுள்ள "காயிர்கஹானி" என்ற ராஜ பக்தர் கூட்டத் தலைவரான மிஸ்டர் செயின் சராக்தீன் என்பவர் இந்தியா மந்திரிக்கு ஓர் வக்கீல் நோட்டீஸ் விட்டுத் தனக்கு லட்ச ரூபாய் கொடுக்கவேண்டுமென்றும் இல்லையானால் கோர்ட்டில் வழக்குத் தொடரப் போவதாகவும் கூறியிருக்கிறார். அந்த வக்கீல் நோட்டீசில் காணப்படுவதாவது :—

எனது கக்ஷிக்காரர் ஒரு பெரிய கண்டிராக்டர். 300 ரூபாய் வருமான வரி செலுத்துகிறார். 1928-ல் காங்கிரஸ் இயக்கம் மும்முரமாக விருந்தபோது சர்க்கார் அவரை அணுகித் தங்கட்கு உதவிசெய்வதற்கான வழிகளைக் கண்டு பிடிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்காகச் செலவாகும் பணத்தைப் பின்னடித் தந்துவிடுவதாகவும் வாக்களித்தார்கள். மேலும் சர்க்காருக்கு உதவுகிறவர்கட்கு வெகுமதி கொடுப்பதாகவும் சொன்னார்கள். அதன் மேல் எனது கக்ஷிக்காரர் "காயிர்கஹானி முல்க்" என்ற ஒரு ராஜபக்தர்கள் கமிட்டியை அமிர்தசரசில் ஸ்தாபித்தார். அதில் ராஜ பக்தியுள்ளவர்களே சேர்க்கப்பட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் டிப்டிக் கமிஷனரின் அங்கீகாரத்தைப் பெற்றிருக்கவேண்டும். எனது கக்ஷிக்காரரிடமிருக்கும் தஸ்தாவேஜுகள் சில உயர்தர உத்தியோகஸ்தர்களால் அங்கீகரிக்கப்பட்டுக் கையொப்பமிடப்பட்டிருப்பதைக் காண்பிக்கும். எனது கக்ஷிக்காரர் சர்க்கார் உயர்தர உத்தியோகஸ்தர் உத்தரவுப்படி தயாரிக்கப்படும் சுவரொட்டி விளம்பரங்களைப் பிரசுரித்து வந்தார். இதனை நிரூபிக்கத் தகுதியான அத்தாட்சிகளிருக்கின்றன. (கக்ஷிக்காரர் ஒட்டிய விளம்பரங்களில் சில "பார்வாரி–அ–முல்க்" சர்வகக்ஷி மகாநாட்டின் உண்மை விளக்கம், சமாதானச் செய்தி, அபாயத்தையும் எச்சரிக்கையையும் கண்டு உஷாராயிருங்கள் என்பனவாம்) இத்துண்டுப் பிரசுரங்களைத் தயாரித்து வெளியிட்டதற்கான செலவைச் சர்க்கார் ஈடுசெய்ய வேண்டிய வராவார்கள். என் கட்சிக்காரர் பல உயர்தர உத்தியோகஸ்தர்களைக் கண்டு பேசினார். இவ்வாறு உத்தியோகஸ்தர்களைப் பார்த்த வகையிலும் அச்சடித்ததற்காகவும் 70 ஆயிரம் ரூபாய் செலவாயிற்று. இதனைக் கவர்ன்மெண்டார் அவருக்குக் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள். மேலே குறிப்பிடப்பட்ட உத்தியோகஸ்தர்கள் இந்திய உத்தியோகஸ்தர்களிடம் கலக்காதிருக்கும்படி என் கட்சிக்காருக்கு உத்தரவிட்டார்கள். ஆதலால் இந்திய உத்தியோகஸ்தர்களிடையிலும் பொது ஜனங்களிடையிலும் என் கட்சிக்காருக்குப் பகைமை ஏற்பட்டது. பொது ஜனங்கள் இவரைச் சர்க்கார் கையாளென்று அவமானப் படுத்தவும் துன்புறுத்தவும் செய்தார்கள். என் கக்ஷிக்காரர் உயிருக்கே ஹானி ஏற்படும் போலிருந்தது. இவரது வீடு மறியல் செய்யப்பட்டது. (19–8–30-ந் தேதியிட்ட 257நெ. முதல் தகவல் ரிப்போர்ட்டைப் பார்க்கலாம்) அப்போது ஒரு நாள் போலீசார் என் கக்ஷிக்காரர் வீட்டைப் பரிசோதனைபோட்டுச் சில தஸ்தாவேஜுகளை எடுத்துக் கொண்டு போயினர். அதில் உத்தியோகஸ்தர்கள் அனுப்பிய சில இரகசியக் கடிதங்களுமிருந்தன. போலீசார் என் கக்ஷிக்காரர் பெயரைக் காலிகள் ஜாபிதாவில் சேர்த்தார்கள். அப்பால் கவர்னருக்குப் பல இரகசிய ரிஜிஸ்தர் கடிதங்களை அனுப்பி நிலைமையை விளக்கியபொழுதே, அவரது பெயர் ஜாபிதாவிலிருந்து எடுக்கப்பட்டது. எனது கக்ஷிக்காரர் கையிலிருந்து செலவிடப்பட்ட ரூ. 70 ஆயிரமும், செய்த அரிய சேவைக்காகவும் தஸ்தாவேஜுகளை வைத்துக்கொண்டதற்காக நஷ்ட ஈடாகவும் ரூ. 30 ஆயிரமும் ஆக லட்சம் ரூபாய் நோட்டீஸ் கிடைத்த 2 மாதத்திற்குள் கொடுக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால் அது பற்றி வழக்குத் தொடரப்படும். அப்போது எல்லாச் செலவு தொகைக்கும் தாங்களே ஜவாப்தாரியாகக் கொள்ளப் படுவீர்கள்.

## காங்கிரஸ் மகாசபை

பம்பாயில் நடைபெறப் போகும் காங்கிரஸ் கூட்டத்திற்குப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இது வரையிலும் 600 தொண்டர்கள் தம் பெயர்களைப் பதிவு செய்திருக்கின்றனர். வரவேற்புக் கமிட்டியில் 500 பேர்கள் சேர்ந்துவிட்டார்கள். சுமார் 20 சப் கமிடிட்கள் ஏற்படுத்தப்படுமென்று தெரிகிறது.

### ரூ. 5 மணியார்டருக்கு 1 அணு கமிஷன்

இப்போது 10 ரூபாய்க்குக் குறைந்த எந்தத் தொகைக்கும் 2 அணு மணியார்டருக்குக் கமிஷன் கொடுக்கவேண்டியிருக்கிறது. கூப்பனிலும் விசேஷ சமாசாரங்கள் எழுத முடிவதில்லை. ஆகையால் 5 ரூபாய் அனுப்பவேண்டியிருந்தால் 5—1—0 கொடுத்து ஒரு போஸ்டல் ஆர்டரை வாங்கி கவரில் அனுப்பிவிடலா மென்றும், இதனால் நீண்ட கடிதங்கள் எழுதியனுப்ப சௌகரிய மேற்படுமென்றும் கருதி அதனை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வர சர்க்கார் யோசிக்கின்றனரென்று தகவல் கிடைக்கிறது.

### காரைக்குடி நகரசபை

காரைக்குடி நகரசபைத் தலைவராய் திரு. மு. ராம பெரியண்ணன் செட்டியாரவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

### சென்னை ஹோம் மெம்பர்

தஞ்சை பப்ளிக் பிராசிக்கூட்டரும் சர்க்கார் வக்கீலுமான ராவ் பகதூர் ஏ. டி. பன்னீர் செல்வம் அவர்கள் சென்னை ஹோம் மெம்பராக நியமிக்கப்பட்டிருக்கின்றாரென்று தெரிகிறது.

### நாகையிலிருந்து மலாயாவுக்கு வார மோருகப்பல்

தொழிலாளர்கள் அதிகமாகச் சிங்கப்பூருக்குச் செல்வதால் நாகையிலிருந்து 14 நாட்களுக் கொருதரம் போகும் கப்பலை வாரமொன்றாக (சில மாதங்கள்) விட்டு வருவார்கள் என்று தெரிகிறது.

### காப்பிக்கோட்டைக்குத் தடை

ஜெர்மனியில் இந்தியக் காப்பிக் கொட்டை இறக்குமதியை தடை செய்துவிட்டார்கள்.



# தென்னிந்தியா கடமை உணர்ந்தது

## ஸ்ரீ புலாபாய் தேசாய் அபிப்பிராயம்

ஜூலை 9-ந் தேதி ஸ்ரீ. புலாபாய் தேசாய் சென்னையை விட்டுப் புறப்பட்டபோது "ஹிந்து" நிருபர் பேட்டி கண்டு தென்னிந்தியாவைப் பற்றிய அவருடைய கருத்தென்னவென்று கேட்டார். அதற்கு ஸ்ரீ தேசாய் கூறியதாவது :—

நான் தென்னிந்தியாவிலுள்ள முக்கிய பட்டணங்கள் சிலவற்றைப் பார்த்த வரையிலும், நாடு, தன் கடமையையும் காங்கிரசின் தீர்மானத்தையும் நன்றாக உணர்ந்திருக்கின்றதென்று கண்டு கொண்டேன். பொது ஜனங்களின் கவனம் தேர்தல்பற்றிச் சென்றிருப்பதாய்த் தெரிகிறது. எனக்குத் தெரிந்த வரையிலும் காங்கிரசுக்கு எதிரிடையான எந்தப் பரபரப்பான கிளர்ச்சியு மிருப்பதாகத் தோன்றவில்லை. சிலர், நிலைமைக்குத் தகுந்தபடி தங்களை அமைத்துக் கொள்ள வழியில்லாது தத்தளிக்கலாம். அத்தகையோர் தாங்கள் காங்கிரசை அடக்கிவிடும்படி சர்க்காருக்கு உதவி செய்பவில்லை யென்றும், ஜாதிப்பிரிவு பற்றியோ, உள்ளூர் விரோதத்தினாலோ, தனிப்பட்ட பகைமையாலோ பாதகம் செய்ய விரும்பவில்லை யென்றும் பாசாங்கு செய்கிறார்கள். அப்படிப் பட்டவர்கள் கடந்த சுயராஜ்யப் போராட்டத்தில் எத்தகைய பங்கு மெடுத்துக் கொள்ளவில்லை என்று தெரிந்து கொள்ளல் வேண்டும்.

நான் பொது ஜனங்களிடம், அரசாங்கத்தின் கொள்கையைப் பொறுத்தவரையில் அதற்கும் தேசத்திற்குமே போராட்டம் நடைபெறுகின்ற தென்றும், ஆகவே வேறு காரியங்களை உத்தேசித்துக்கொண்டு முக்கிய பிரச்சினையைக் கைவிட்டுவிடக் கூடாதென்றும் கேட்டுக் கொண்டேன்.

பின்னல் இக்கேள்வி கேட்கப்பட்டது :—வரும் தேர்தலில் ஜஸ்டிஸ் கட்சியார்போன்ற இதர கட்சியாரோ அன்றி ஒரு கட்சியையுமே சேராத மற்றவர்களோ போட்டி போட்டால் என்ன செய்யலாமென்பது தங்கள் கருத்து?

பதில் :—இந்தத் தேர்தலில் இதற்கு முன் எக்காரணம் பற்றிப் போட்டிகள் நடைபெற்றனவோ அக்காரணங்கள் ஒன்றும் தலை காட்டுவதற்கில்லை. முதலில், இது உள்ளூர்க் கௌன்சிலுக்கோ ஸ்தாபனங்கட்கோ நடைபெறும் ஓர் தேர்தலல்ல. அகில இந்தியாவுக்கும் பொதுவாக நடைபெறும், ஓர் பொதுத் தேர்தலாகும்; ஆதலால் தனிப்பட்ட சில்லறை விஷயங்கள் தலையிடுவதற்கில்லை. இத்தேர்தல் தேசீய மதிப்பொன்றை நிலை நாட்டுதற்காகவே நடத்தப்படுகிறது. இன்றைய பிரச்னை, சென்ற போராட்டத்தால் உற்பத்தி செய்யப்பட்ட உணர்ச்சி (நாமடைந்த உடலூறுகளோடு) உயிரடங்கிப் போயிற்ரு அல்லது விழித்துக் கொண்டிருக்கின்றதாவென்று பரிசோதிப்பதாகும். அதற்காகப் பொது ஜனங்கள் காங்கிரஸ் தலைவர்களிடம் நம்பிக்கை வைக்கவேண்டுவது அவசியம்.



தூத்துக்குடி பொழுது போக்குச் சங்கத்தின் காரியதரிசியாகிய ஸ்ரீமதி பொன்னுக்கண்ணு சாம்சன் அவர்கள் அவ்வூர் கௌரவ மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப் பட்டிருக்கிறார். —P. P. B.

கேள்வி :—சென்ற போராட்டத்தில் ஏற்பட்ட சாரீரத் தொந்தரவுகளின் பின் இம்மாகாணம் காங்கிரசின் வேண்டுதலுக்குச் செவி சாய்க்கவில்லை என்று காண்கின்றீர்களா?

பதில் :—நான் மதுரை, கோயமுத்தூர் முதலிய சில விடங்களில் பேசிய கூட்டங்களின் அளவைக் கவனிக்கும் போது, காங்கிரசின் சார்பில் நிற்க வேண்டுமென்ற பொது ஜனங்களின் ஆசை அளவிட முடியாததென்று காண்கின்றேன். அந்தக் கூட்டங்களில் எல்லாவித இயல்பினரும்—வியாபாரிகள், வக்கீல்கள், டாக்டர்கள், மிராசுதாரர்கள் முதலிய பலர்—சொல்ல முடியாத உணர்ச்சியோடு தென்பட்டார்கள். பெரும்பாலாக இப்படிப்பட்ட ஜனங்களை அதிகமாகக் காக்கவைக்கக் கூடாது என்றுகூட நினைத்து விட்டேன்.

### தீண்டாமை விலக்கு

அப்பால் தீண்டாமை யொழிப்பு சம்பந்தமான காங்கிரஸ் தீர்மானத்தைப் பற்றிக் கேள்வி கேட்கப்பட்டது. அதுபோது ஸ்ரீ. தேசாய் கூறியதாவது:—

இந்தப் பகுதி, காங்கிரஸ் நிகழ்ச்சிக் குறிப்பிலுள்ள முக்கியமான ஒன்றாகும். இதனையும் காங்கிரசின் ஆக்க வேலைத் திட்டத்தையும் தற்போதைய தேர்தல் பிரசாரத்திட்டத்தின் கீழ்க் கொண்டுவரவில்லை. ஏனென்றால், அவ்வாறு கொண்டு வரும்போது, பொது ஜனங்கள் நம் வேண்டுகோளை வேறுவிதமாக நினைத்துவிடுவார்கள். இன்று பொது மக்கள் செய்ய வேண்டிய விஷயம், நான் பல கூட்டங்களில் சொன்ன மாதிரி, எதிர்கால அரசியலைப்பற்றிய தற்போதைய அரசாங்கத்தின் கொள்கையை அங்கீகரிக்காதிருப்பதும், காங்கிரசை அடக்குவதில் காண்பித்த முயற்சியைப் பாராட்டாதிருப்பதுமாகும். காங்கிரஸும் காந்திஜியும் தீண்டாமை யொழிக்கும் விஷயத்தில் காண்பிக்கும் ஊக்கத்தை எவரும் தவறாக நினைக்க வேண்டாம்.

## மேட்டூரில் மிகப் பெரிய அணைக்கட்டு

### மே. த. வைசிராய் திறந்து வைப்பார்

சமீபத்தில்தான் மேன்மை தங்கிய அரசப் பிரதிநிதி பெரிதாகக் கட்டப்பட்ட விசாகப்பட்டணத் துறை முகத்தைத் திறந்து வைத்தார். அதற்குள்ளாக மற்றொரு மிகப்பெரிய அணைக்கட்டைத் திறந்து வைக்க வேண்டிய சந்தர்ப்பம் வந்து விட்டது. அவ்வணைக்கட்டு "காவேரி மேட்டூர் அணைக்கட்டு" என்பதாகும். இவ்வணை சுமார் பத்து வருடங்களாக எத்தனையோ ஆயிரவர்கள் உழைத்ததின் பயனாக முடிவுற்றிருக்கிறது. இதுவரையிலும் செலவான தொகை நூற்றி ஐம்பது லட்சம் ரூபாய்!

இவ்வணைக் கட்டை ஸர் ஜார்ஜ் ஸ்டான்லி (ஆக்டிங் வைசிராய்) திறந்து வைப்பார். அணைக்கு அவருடைய பெயரே வைக்கப்படும்.

சென்னைக்கும் மேட்டூர் அணைக்கட்டுக்கு முள்ள தூரம் 230 மைல். நீண்ட நாளாகத் தென்னிந்திய உழவர்கள் இத்தகைய ஒரு பெரிய அணைக்கட்டின் தேவையை உணர்ந்து கொண்டு வந்தார்கள். சமீபத்தில் ஸர் சி. பி. ராமசாமி ஐயர் அவர்கள் சட்ட மெம்பராயிருந்த காலையில் மேட்டூர் அணை கட்டுவதற்கு முயற்சிக்கப்பட்டது. அதனைக் கட்டி முடித்த விஷயத்தில் ஸர். ஐயருக்கு ஒரு பங்குண்டு என்னலாம். தஞ்சை, திருச்சிறுப்பள்ளி ஆகிய ஜில்லாக்களிலுள்ள மிராசுதார்கள் இவ்வணைக் கட்டினால் மிகுந்த நன்மை யடைவதால் மிகவும் ஊக்கம் காட்டுவார்க ளென்று நம்பப்படுகிறது.

மேட்டூர் அணைக்கட்டு உலகில் உள்ள பெரிய அமைப்பில் ஒன்றாகும். அதிலிருக்கின்ற ரிசர்வாயரை உலகில் நான்காவது என்று விஷயம் தெரிந்தோர் கருதுகின்றார்கள். அணைக்கட்டை ஸர் ஜார்ஜ் ஸ்டான்லி அவர்கள் பெயராலும், அணைக்கட்டி னடியிலிருக்கும் "பார்க்கு"களை லேடி ஸ்டான்லியின் பெயராலும் அழைப்பார்கள் என்று தெரிகிறது.

திறப்பு விழாவன்று நடை பெறுவதாகப் போடப்பட்டிருக்கும் நிகழ்ச்சிக் குறிப்பு இந்தியாவிலேயே பெரிது என்று சொல்லலாம். ஏராளமான அழைப்பு அனுப்பப்பட்டுள்ளது. வெளிநாடுகளிலிருந்து அணைக்கட்டுக்குச் சாமான்கள் கொடுத்தவர்களும் 10 வருடமாக வேலை செய்த என்ஜினீயர்கள் பலரும் அழைக்கப்படுவார்கள் என்று சொல்லப்படுகிறது.



சௌகார்ப்பேட்டையில் ஞாயிறன்று காலையில் சென்னை 'குஜாராத்திகள் ஸ்ரீ தேசாய்க்கு ஒரு உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்தார்கள்.—P.P.B.

## காந்திஜீ தமாஷ்

---

அடுத்த மாதம் சிறைக்குச் செல்லப் போகிறாராம்

---

காந்திஜீ பவநகாம் ஹரிஜன் ஆச்ரமத்தில் தங்கியபோது ரசமான வேடிக்கைகள் பல பேசினார்.

சில சிறுவர்களிடம் கேள்விகள் கேட்கச் சொன்னபோது ஒரு வாலிபன் "நீங்கள் நெடுநாள் ஹரிஜன உத்தாரண வேலையே செய்துகொண்டிருக்க வேண்டும்; அடுத்த மாதம் சிறைக்குப் போகக் கூடாது" என்று கூறினான்.

அதற்குக் காந்திஜீ:—நீ கூறுவது போல என் இதர நண்பர்கள் கூறவில்லை. பலர் நான் ஜெயிலுக்குப் போக வேண்டுமென்கிறார்கள்.

அப்பால் மகாத்மா அந்தச் சிறுவன் சிறை செல்வானாவென்று கேட்டார். அவன் போகச் சித்தமா யிருப்பதாகத் தெரிவித்தான். உடன் காந்திஜீ:—நீ இப்போது சிறைக்குச் செல்லத் தயாராக விருந்தால், உங்களை யெல்லாம் அனுப்பிவிட்டு நான் வெளியே இருப்பது தகுதியாகுமா?

---

### காந்திஜீயின் சிறைப் பாட்டு

சமீபத்தில் காந்திஜீ ஏரவாடாச் சிறையி லிருந்தபோது தமக்கு மிகவும் பிரியமான சில செய்யுட்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அவை இப்போது இங்கிலாந்தில் "சிறையிலிருந்து பாட்டு" என்ற பெயரால் பிரசுரம் செய்யப்பட் டிருக்கிறது. இப்பாட்டுகளில் பெரும்பான்மை உபநிஷதங்களி லிருந்து எடுக்கப்பட்டவைகளாகும். மிஸ்டர் ஜான் S. ஹேய்லாந்து என்பவர் அவற்றைக் கோர்வையாக்கிப் பிரசுரம் செய்திருக்கிறார்.

---

"நீ ஏன் உன் மனைவியை உலக்கையால் அடித்தாய்?"

குற்றவாளி:—உரலைத் தூக்கினேன்; நகரவில்லை; ஆகையால்.



மேட்டூர் அணைக்கட்டின் முழுத் தோற்றம். கறுப்பு, சிவப்பு நிறமுள்ள கோபுரங்கள் காணப்படுகின்றன. —P.P.B.



மேட்டூர் அணைக்கட்டில் அடித்தளத்தில் அமைந்திருக்கும் மடைகளின் தோற்றம். —P. P. B.



மேட்டூர் அணைக்கட்டில் கட்டப்பட்ட முதலாவது பாலம். —P.P.B.



அதிக்ப்படியான பாலத்தின் சித்திரம். இதற்கு 16 ஆர்ச்கள் உண்டு. —P. P. B.





தண்ணீர் வெளியே விடப்படும் கால்வாய். —P.P.B.



பம்பாயில் கடுமையான மழை. —S. P. B.



வேலூரில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் "பம்பிங்" ஸ்டேஷன். கனம் பொப்லி ராஜா அவர்கள் சென்ற வாரம் திறந்து வைத்தார். —P. P. B.



திரு. பாட்கரின் தலைமையில் பூனாப் பெண்கள் கல்லூரி பட்டமளிப்பு விழா நடத்தப்பட்டது. ஸ்ரீமதி சரோஜினி தேவி சொற்பொழிவு நிகழ்த்தினர். —S. P. B.

# ஸ்ரீ புலாபாய் தேசாயின் பிரசங்கம்

## “சத்தியாக்கிரகம் போல் சிறந்த ஆயுதமில்லை”

### தியாகம் செய்தவர்க்கே ஓட்டுக் கொடுங்கள்

ஜூலை 9-ந் தேதி சென்னை ஹைக் கோர்ட் கடற்கரையில் ஸ்ரீ. புலாபாய் தேசாய் செய்த பிரசங்கத்தின் சுருக்கமாவது :—

சென்ற இருபத்தைந்து வருடமாக இந்தியா தேசம், பிரிட்டிஷ் நீதி நியாயங்கட் குட்பட்டு இந்திய ஆட்சி முறையைச் சீர்திருத்தி சுயேச்சை வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டது. அதுபோதெல்லாம் இங்கிலாந்து மக்கள் ‘நாங்கள் இந்தியர்கட்குச்சுயாட்சி செய்யும் மாதிரியைக் கற்பிப்பதற்கே வந்திருக்கின்றோ’ மென்று பதில் கூறினர்கள். இதனை ஆதிகால இந்தியத் தேசியவாதிகள் பலர் நம்பாமலிருக்கவில்லை. இன்று கூடவும், பிரிட்டன், இந்தியா சுயாட்சிக்குத் தகுதியுடைய தென்று அங்கீகரித்து விட்டதால் சுயராஜ்யம் கிடைத்து விடுமென்று நம்புகின்றவர்களுண்டு. அப்படிப்பட்டவர்கள், எதற்காகச் சென்ற 110 வருடங்களாக மேனாட்டார் ஆபிரிக்காவைப் பங்கு போட்டு ஆஷியாவை ஊடுருவிக் கொண்டு வந்தார்கள் என்று யோசிக்க வேண்டும். உண்மையில் மேனாட்டார் கட்கு இப்பகுதிகளி (ஆபிரிக்கா ஆசியாவி)லுள்ள பண்படுத்தப்படாத பொருள்கள் தேவை; ஆதலப்பற்றியே நுழைந்தார்கள். ஆகவே, பிரிட்டிஷார்கள் நீதி நியாய உணர்ச்சிக்குக் கட்டுப்பட்டு இந்திய சர்க்காரை இந்தியர் கையில் கொடுத்துவிடுவார்கள் என்று எவரும் எண்ணவேண்டாம்.

பிரிட்டிஷாருக்கு எவ்வாறு சுயராஜ்யம் பெற வேண்டுமென்பது தெரியும். அவர்கள் பர்க்கின் தேசீயக் கோட்பாடுகளை அறிவார்கள். பிரஞ்சுப் புரட்சிக்குக் காரணம் என்னென்ன என்பதைத் தெரிவார்கள். மாக்னா சார்ட்டா ஏற்பட்டது முதல் இன்று வரையிலும்—அதாவது யதேச்சாதிகாரஞ் செலுத்திவந்த அரசனை அழுத்தி எவ்வாறு சட்ட திட்டங்கட்குக் கட்டுப்பட்ட அரசனுக ஆக்கினார்கள் என்பது வரையிலு—முள்ள சரித்திரம் நன்கு பாடமுண்டு. அதேபோல அமெரிக்க சுயாட்சி எவ்வாறு போராடிவாங்கப்பட்டது என்பதையு மறிவார்கள். ஆனால், அவற்றை யெல்லாம் பரிசுக்கட்டுரை யெழுதுவதற்காக உபயோகிக்கின்றார்



இந்தியத் தேசீய மகா சபையின் மாஜித் தலைவராகிய திரு. S. ஸ்ரீநிவாச ஐயங்காரின் உருவப் படத்தை ஸ்ரீ புலாபாய் தேசாய் சென்ற ஞாயிற்றுக்கிழமை மைலாப்பூர் ரானடே மண்டபத்தில் திறந்து வைத்தார். படத்தில் ஸ்ரீ தேசாய், ஸர். ஜஸ்டிஸ் V. ராமேசம், சர். அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், திவான் பகதூர் A. ராமசாமி முதலியார், திரு. கே. ஸ்ரீநிவாசன், திரு. வி. என். முத்துரங்க முதலியார், திரு. எஸ். சத்தியமூர்த்தி, திரு. கே. பாஷ்யம், ராவ்பகதூர் ஜி. எ. நடேசன், திரு. வாவெல்லா வெங்கடேஸ்வர சாஸ்திரிலு முதலியோர் காணப்படுகின்றனர். —P. P. B.

களேயன்றி நடை முறையில் காண்பிப்பதற்குப் பயன்படுத்துவதில்லை. பிறர் அவர் கற்ற பாடங்களை நடத்தவேண்டு மென்பது அவர்களது விருப்பம். ஆகையினால்தான் அவர்கள் காந்திஜீயின் வேண்டுதலுக்குச் செவி சாய்க்கவில்லை. காந்திஜீ அவர்களைப்போல ஆயுதப் போராட்டம் செய்வதால் இருசாராரும் அழிந்து படுவரென்பதை நன்கு அறிவார்; ஆகையினாலேயே சாத்வீக ஆயுதத்தையே ஏந்தி முன் வந்தார்.

#### புதிய போராட்டம்

இந்தி... இதுபோது, தான் அடக்கப்பட்டிருப்பதை விரும்பவில்லை என்று காண்பிப்பதற்காக ஓர் புதிய போராட்டத்தில் இறங்கி யிருக்கிறது. அருமைக் குழந்தையாக விருந்தாலும் சரி; அது அழவில்லையானால் அதன் தாய்க்கு அதன் பசியை அறிய முடியாது. நிச்சயமாகவும் நாம் இப்படியே இருந்து கொண்டிருந்தால் அதிகாரிகளும் அவர்கள் போக்கிலேயே போய்க் கொண்டிருப்பார்கள். எனவே நாம் இன்று பேச விரும்புகிறோம். அதாவது நாம் தேசத்தின் விடுதலைக்காக எந்தத் தொல்லையும் அடையத் தயாரா யிருக்கிறோமென்று சொல்லு

விரும்புகிறோம். நம்மை அடிமைப் படுத்தும் எந்த முறைக்கும் சட்டம் என்ற பெயரைக் கொடுக்கக்கூடாது.

நமது போராட்டத்தைக் கண்டித்த சிலர் வட்டமேஜை மகாநாட்டுக்குச் செல்லவேண்டுமென்றும் இல்லையானால் காரியம் முழுகிப் போய்விடுமென்றும் கூக்குரல் போட்டார்கள். அவ்வாறே, பல மிதவாதிகளும் பிறரும் போயினர். இங்கிலீஷார் எல்லார் பேச்சையும் கேட்டுவிட்டு "நல்லது போய் வாருங்கள்" என்று கூறிவிட்டார்கள்.

சுதந்திரமென்பதற்கு வாதம் தேவையில்லை. ஒவ்வொருவரும் தத்தமக்குச் சுதந்திரம் தேவையென்று உணரவேண்டும்; அதனைப்பெறத் தீர்மானம் செய்யவேண்டும்; அதற்கான தியாகங்களைச் செய்யவேண்டும். அவ்வாறு தமக்குள் முடிவு செய்த பின்னர் நம் பிரதிநிதிகள் சென்று விடுதலை கேட்டால்தான் கிடைக்கக்கூடும்.

சத்தியாக்கிரகப் போராட்டத்தைச் சிலர் குறை கூறுவதாகத் தெரிகிறது. அவர்கள் அப்போராட்டம் வியாபாரத்தைச் சிதைத்து விட்டதென்றும் இளைஞர்கள் பலனைக் கெடுத்துவிட்டதென்றும் காரணம் காட்டுகிறார்கள். நான் ஸ்கூல்களிலும் காலேஜுகளிலும் ஒழுங்காகவிருந்த வாலிபர்கட்கு இப்போது என்ன பொக்கிஷம் கிடைத்துவிட்டதென்று கேட்கின்றேன். வியாபாரம் கெட்டுவிட்டதென்பவர்கள், காங்கிரசைச் சேராது லட்சக்கணக்கில் பொருள் வைத்து வியாபாரம் செய்தவர்கள் கதி இன்று என்னவாயிற்றென்று கவனிக்க வேண்டும். அன்றி இப்படியே இன்னும் பல வருடங்கள் அடிமைகளாகவே இருந்து வந்தோமானால் நம் வியாபாரம் என்ன கதி யடையுமென்றும் நினைக்கவேண்டும். யாரேனும் சத்தியாக்கிரக இயக்கத்தை ஆட்சேபிப்பார்களானால் அதன் காரணம் ஒன்று அறிவு குறைவாயிருக்க வேண்டும்; அல்லது 'பயங்காளி'த்தனமா யிருக்க வேண்டும். ஆகவே நான், சத்தியாக்கிரகமே, நாம் ஐக்கியமாக ஒன்று சேர்ந்து உபயோகிக்கவேண்டிய ஆயுதம் என்று கூற விரும்புகிறேன். அந்த ஆயுத மில்லையானால்,—எதிர்க் கட்சியாரே ஜட்ஜாக விரும்பவர்களும், எப்போதும் இந்தியாவுக்கு அன்பு பூண்டு சுயராஜ்யம் வழங்கப் போகிறோமென்று சொல்லிக் கொள்பவர்களும், ஆனால் காலம் ஒத்துவராததால் கொடுக்க முடியவில்லையென்று வருந்துபவர்களுமாகிய—ஒரு சாராரிடம் நமது கட்சியை எடுத்துச் சொல்ல முடியாது. நீங்கள் யாராவது உண்மையான அன்பு பூண்டிருக்கும் ஒரு தாய் குழந்தையை அடிமைப் படுத்துவதைப் பார்த்திருக்கிறீர்களா?

நான் உங்களிடம் நீங்களே நம்பிக்கை கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் காந்திஜியை எதிர் பார்க்கவேண்டாம். அவருடைய வேலை, உங்களுடைய ஆண்மையை எடுத்துக் காட்டுவதும், உங்கட்கு விழிப்பை யூட்டுவதும் தான். நீங்கள் உங்கள்மீது நம்பிக்கை கொள்ளவில்லையானால் அதன் காரணம் 150 வருடமாக அடிமைப்பட்டிருந்ததாகவே இருக்கவேண்டும். நான் உங்களிடம் எந்தப் போராட்டத்திற்கும் ஓர் ஒழுங்கிருக்குமென்று கூற விரும்புகிறேன்.

இனி, நம் போராட்டம் வேறுவழியாக நடைபெறப் போவதால் அடுத்த தேர்தல் காலத்தில் இந்தியத் தேசீய மகாசபையை மறந்துவிட வேண்டாம். ஒவ்வொருவரும் தம் கடமையை உணர்ந்து வாக்களிக்க வேண்டுமென்பது என் விருப்பம். ஒன்றிரண்டு ஓட்டுகள் குறைந்துவிட்டாலும் தவறுதலாகக் கிடைக்கும் ஓட்டுக்கு நான் ஆசைப்பட மாட்டேன். நீங்கள் யாராவது சத்தியாக்கிரக இயக்கம் தவறாக வேலை செய்ததென்று நினைப்பீர்களானால், நீங்கள் ஓட்டுக் கொடுக்க வேண்டாம் என்றே சொல்வேன்.

வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றவர்கள் ஒருவருக்கும் பிரதிநிதிகளல்லர்; அவர்களுடைய சொந்தக் குடும்பங்கட்குக் கூடவும் பிரதிநிதித்துவம் வகிக்கவில்லை. அவர்களெல்லாம் இந்தியாவில் பெரிய ஸ்தாபனம் காங்கிரஸ்தானென்றும் தாங்களெல்லாம் இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்க வேண்டுமென்றே ஆசைப்படுகின்றோமென்றும் கூறினார்கள். அத்தகையோர்கள் இன்று சுயராஜ்யம் கேட்கும் இந்தியருக்கும் சர்க்காருக்கும் நடைபெறும் போட்டியில் யார் பக்கம் ஓட்டுக் கொடுக்கப் போகிறார்கள்?

### வகுப்புத் தீர்ப்பு

(பின்பு 'வகுப்புத் தீர்ப்புப்பற்றி காங்கிரஸ் விளங்காத ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருப்பதின் மர்மமென்ன?' என்று கேட்கப்பட்ட கேள்விக்குப் பதில் கூறினர்.)

காங்கிரஸ் ஓர் பெரிய ஸ்தாபனம். எல்லா மதத்தினருக்கும் அது பிரதிநிதியாயிருந்து வருகிறது. வகுப்புத் தீர்ப்பென்பது உள்ளே விஷம் நிரம்பியதும் மேலே இனிப்புப் பூசப்பட்டதுமான ஓர் பலகாரமாகும். அதனைச் சாப்பிட்டால் கெடுதி நேரிடுவது உறுதி. இந்த வகுப்புத் தீர்ப்பு முறையால் இந்து முஸ்லிம்களைப் பிரித்து அடிமைத்தனத்தை நீடிக்கப் பார்க்கிறார்கள் வெள்ளைக்காரர்கள். ஆகவே, நாட்டின் க்ஷேமத்தை உத்தேசித்து—வகுப்புத் தீர்ப்பு மகமதியர்கட்குச் சற்று நன்மை பயப்பதுபோல் தோற்றினாலும்—அதனை ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஆனால், ஒருகால் முஸ்லிம்கள் அதனை ருசிபார்க்க விரும்பினால் தடுப்பதற்கில்லை. ஆதலால் காங்கிரஸ், தீர்மானத்தை மிகப் புத்திசாலித்தனமாகப் போட்டிருக்கின்றதென்பதில் சந்தேகமில்லை. முஸ்லிம்களும் இந்துக்களும் இரு ஜாதியாரல்லர். ஒரே ஜாதியார்—இரு மதங்களைப் பின்பற்றுவதால் இரு பிரிவினர். இதுதான் இந்து முஸ்லிமென்பதின் கருத்து. சில்லறை விஷயங்கட்காக இந்திய மக்கள் சண்டை போட்டுப் பெரிய பொது விஷயத்தை இழந்து விட்டார்களானால் அதைப்போல் தப்பிதம் வேறில்லை.

கடைசியாக, காங்கிரஸ், சட்டசபைப் பிரவேசத் தீர்மானம் செய்திருப்பதால் தனிப்பட்ட பகைகள், பணப் பெருமை, வகுப்பு வாதம் முதலியவற்றைப் பொருட்படுத்தித் தேசத்தைக் காட்டிக் கொடுத்து விடலாகாதென்று சொல்லிக்கொள்கிறேன். நமக்கு விடுதலையே லட்சியம். இச்சோதனை காலத்தில் ஒருவன் தேசாபிமானிதானா, தேசத்திற்காகத் தியாகம் செய்தானா, பொது ஜனங்கட்குத் துணை நிற்பவன் தானாவென்று பார்ப்பது நம் கடமை. காங்கிரசின் ஓட்டு ஒன்றுகூடப் பாழாகும்படி விட்டுவிடக்கூடாது. ஓட்டு சர்க்காருக்கா அல்லது காங்கிரசுக்காவென்று நன்றாகத் தெரிந்துவிட வேண்டும். காங்கிரஸ் அபேக்ஷகர்களைக் கௌரவிக்கும்படி எல்லோரையும் மறுமுறையும் கேட்டுக் கொள்கிறேன்.



# :: சோவியத் ருஷ்யாவில் ::

## பெண் தொழிலாளிகள்

சோவியத் ருஷ்யாவில் பெண்கள் முன்னேற்றம் ஏற்படுவது போல உலகில் எந்த நாட்டிலும் காண முடியாது. சோவியத் சர்க்காரின் அடிப்படையான கொள்கை ஆண்கட்கும் பெண்கட்கும் சமமான அந்தஸ்து இருக்கவேண்டுமென்பதாகும். ஆதலால் தினந்தினம் பெண்கள் வளர்பிறைச் சந்திரனைப் போல் ஆற்றலிலும் ஆதிக்கத்திலும், ஆட்சி முறையிலும் முன்னேறி வருகிறார்கள்.

தொழில் பகுதியை எடுத்துக்கொண்டால் ஆண்களைப் போலவே பெண்களும் பலமும் ஊக்கமும் பெற்று வருகிறார்கள் என்று காணலாம். இன்று ருஷ்யாவிலுள்ள தொழிலாளிகளிலும் தொழில் கொடுப்போரிலும் மூன்றிலொரு பங்கு பெண்களாவர். சென்ற (முதலாவது) ஐந்துவருடத் திட்டத்தின் போது பெண் தொழிலாளிகள் தொகை நூற்றுக்கு இரண்டரை விகிதம் பெருகிற்று. அப்பால் கடந்த மூன்று வருடங்களில் 35 லட்சம் பெண்கள் அதிகப்படியாகச் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். எனில், இன்று பெண் தொழிலாளிகள் தொகை எந்த அளவுக்குப் பெருகி இருக்கக் கூடும்!

சமீபத்தில் நடைபெற்ற கக்ஷி மகாநாட்டில், தற்போதிய ருஷ்யச் சர்வாதிகாரியான ஸ்டாலின் பேசுகையில், கூட்டு விவசாய முறையில், விவசாய ஐக்கிய சங்கங்களின் தலைவிகளாக 6000 பேர் இருக்கின்றார்களென்றும், அவற்றின் நிர்வாகக் கமிட்டிகளின் அங்கத்தினர்களாக 60 ஆயிரம் பேர்களிருக்கின்றார்களென்றும், விவசாயப் பகுதிகளமைக்கும் வேலையில் ஒரு லட்சம் பேர் ஈடுபட்டிருக்கின்றார்களென்றும், இயந்திரக் கலப்பைகளோட்டும் டிரைவர்களாக 7000 பெண்களிருக்கின்றார்களென்றும் குறிப்பிட்டார். ஆ! எவ்வளவு பெரிய மாற்றம்! இதர தேசங்களில் கனவில்கூட இவ்வளவு பெருந்தொகையான பெண்கள் இவ்வளவு பலதர வேலைகளில் முன் வந்திருக்க முடியுமா!

சுருக்கமாகக் கூறினால் என்ஜினீயர்களில் நூற்றுக்கு 22 பேர் பெண்கள்; ரசாயன சாஸ்திரிகளில் நூற்றுக்கு 20 பேர் பெண்கள்; கைத்தொழில் ஆராய்ச்சியாளர்களில் பகுதிக்கு மேல் பெண்கள். அவர்களோடு எத்தனையோ டிராம் வண்டி யோட்டிகளும், மற்ற என்ஜின்கள் ஓட்டுபவர்களும், சுரங்கத்தொழில் இஞ்சினீயர்களும் எஃகுத் தொழிற்சாலைத் தலைவர்களும் பெண்களாவர்! எவ்வளவு பெரிய முன்னேற்றம்! 1928ல் ஒரு ருஷ்யப்பத்திரிகை எழுதியபோது பெண்களிடையே தேர்ச்சியுற்ற எந்தத் தொழிலாளியையும் காண முடியாது என்றது. ஆனால் இன்று நினைக்க முடியாத முன்னேற்றம் பெண்களிடையே ஏற்பட்டு விட்டது. போரில் வீரர்களாகவும், உடற் பயிற்சிப் போட்டிகளில் முதன்மையாகவும் விமானவோட்டிப் பந்தயத்தில் முதல் விருது பெறுபவராகவும் பெண்கள் காணப்படுகின்றார்கள் என்றால் அதிகம் என்ன சொல்ல வேண்டும்?

இவ்வாறு பெண்கள் சோவியத் ருஷ்யாவில் முன்னேறுவதற்குக் காரணம் அங்குள்ள சட்ட திட்டங்களே. முதலாவது ஐந்து வருடத்திட்ட மேற்படுத்தப்பட்டபோது பொருளாதார இலாகாத் தலைவர்கள் தொழில்கட்கு ஆண்களையும் பெண்களையும் சேர்ப்பதென்றும் தாய்மார்களான தொழிலாளிகளின் குழந்தைகளைப் பாதுகாக்கத் தனியான நிலையங்களும் நர்சு (செவிலி)களும் கொடுத்துதவுவதென்றும் முடிவு செய்தார்கள். அன்றி ஆணையினும் பெண்ணையினும் எந்தத் தொழிற்சாலையிலும் சேர்த்துக்கொள்வதென்றும் சட்டம் செய்தார்கள். சோவியத் சர்க்காரின் ஏக உத்தேசம் நாட்டை எவ்வழியிலும் அதி விரைவில் கைத்தொழில், விவசாயமாகியவற்றினால் நிரப்பிச் சிறப்பித்து விட வேண்டுமென்பதாகும். அவ்வுத்தேசத்திற்கேற்றாற்போல இயற்கையா யமைந்த நல்ல காடுகளும், பயிர் செய்யத்தகுந்த பிரதேசங்களும் ஏராள முள்ளன. ஆகவே அவர்கள் (ருஷ்யர்கள்) வேண்டுவதெல்லாம் தொழிலாளிகள்தான்!

ருஷியப் பெண்கள் முன்னேற்றத்தில் காணப்படும் மற்றொரு விஷயம் குறிப்பிடத் தகுந்ததாகும். ஏராளமான பெண்கள் கைத்தொழில், கலையாகியவை பயிற்றப்படும் சர்வகலாசாலைகளில் சேர்ந்துள்ளார்கள். சர்க்கார்த் திட்டக் கமிஷனர்கள் கணக்குப் படி சர்வகலாசாலை மாணவர்களில் 100க்கு 32 விகிதமும், இரண்டாவதாகக் கைத்தொழில் பாடசாலைகளில் நூற்றுக்கு 40 விகிதமும் பெண்கள் என்று தெரிகிறது. ஆனால் 1928ல் இருந்த தொகையோ மிக மிகக் குறைவு—அதாவது 4 லட்சத்து 49 ஆயிரம் பேர்தான் மாணவர்கள். அது 1933ல் 15 லட்சத்து 62 ஆயிரமாகப் பெருகிற்று.

வைத்தியக் கல்லூரிகளை எடுத்துப் பார்த்தால், நூற்றுக்கு 72 விகிதம் மாணவிகள் காணப்படுவர்! விவசாயக் கலாசாலைகளில் 31 விகிதம் பெண்கள் காணப்படுவர்! கைத்தொழில் பள்ளிக் கூடங்களில் 20 விகிதமே காணக்கூடும். இது ஒரு பாலிருக்க, நாட்டின் போக்கைக் கவனித்தால் பெண்கள் ஆடவரை விட முன்னேறிவிடப் பலபடியாலும், முயல்வதைக் காணலாம். இத்தகைய பெண்களின் ஆசை நிரந்தரமானதாயிருந்தாலும் சரி, தாற்காலிகமானதாயிருந்தாலும் சரி, இன்று சோவியத் ருஷ்யாவுக்கு ஆண் பெண்ணாகிய இரு பாலாரினுடையவும் தொண்டு (ஊழியம்) தேவை. இன்னும் பல வருடங்கட்கும் அத்தேவை ஒழிந்துவிடாது என்று யூகிக்கலாம்.

எங்ஙனமானாலும் சோவியத் ருஷ்யா இதர தேசங்கள் பேச்சளவில், கற்பனையளவில், காகித அளவில் வைத்திருக்கும் ஒரு லட்சியத்தை நடைமுறையில் காண்பித்து உலகிற்கே ஒரு படிப்பினையைத் தருகின்றது. மற்றத் தேசங்கள் இதனைப் பார்த்து நடக்க வேண்டுவதாகும். மனிதர் குழாத்தில் நேர் பகுதியான பெண்களைத் தாழ்த்திப் பேதையர்களாக வைத்து விட்டு ஒரு பகுதி மட்டிலும் பாடுபடுவதை விட, இருபகுதியும் ஒத்துழைத்தால் காரிய சித்தி எளிதில் கைகூடுவதோடு வலிமையும், சௌகரியமும் அதிகரிக்கும்.

# செய்தித் திரட்டு

### விஸ்வகர்மர் மகாநாடு

தென்னிந்திய விஸ்வகர்மர் மகாநாடு ஆகஸ்ட் மாதம் 18, 19-ந் தேதிகளில் கும்பகோணத்தில் நடை பெறுமென்று அறிவிக்கப்படுகிறது.

### பாரதிப் பள்ளிக் கூட ஆண்டு விழா

காரைக்குடி பாரதி பள்ளிக் கூடத்தின் ஆண்டு விழா ஆனி கடைசி வாரத்தில் நடைபெறுமென்று தெரிகிறது.

### 192 கோடி கப்பலேறிற்று

இந்தியாவிலிருந்து இவ்வாரத் தொடக்கம் வரையிலும் பம்பாய்த் துறைமுகம் வழியாக 192 கோடி ரூபாய் பெறுமானமுள்ள தங்கம் வெளிநாடு சென்றிருக்கிறது.

### ஸ்ரீமதி சுப்பராயன் தேர்தல் அபேக்ஷகர்

குமாரமங்கலம் ஜமீன்தாரணி ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் அவர்கள் இந்தியச் சட்டசபைத் தேர்தலில் கோயமுத்தூர், சேலம், வட ஆற்காடுத் தொகுதிக்கு ஓர் அபேக்ஷகராய் நிற்கிறார் என்று தெரிகிறது.

### மகாத்மாவுக்கு 11 ஆயிரம்

ஜூலை 8-ந் தேதி காந்திஜீ காராச்சி சென்றிருந்தபோது 11 ஆயிர மடங்கிய பண முடிப்புக் கொடுக்கப்பட்டது. கார்ப்பொரேஷன் கொடுத்த வெள்ளிப் பேழையை ஏலம் போட்டதில் 2500 ரூபாய் வசூலாயிற்று.

### திரு. மகாதேவ தேசாய் விடுதலை

காந்திஜீயின் அந்தரங்கக் காரியதரிசியும் சென்ற ஆகஸ்ட் மாதம் சிறைப்படுத்தப்பட்டவருமான ஸ்ரீ. மகாதேவ தேசாய் ஜூலை 9-ந் தேதி ஹிண்டல்கா சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்.

### ஸ்ரீமதி மணிபென் படேல்

ஸ்ரீ. வல்லபாய் படேலின் புதல்வியாகிய மணிபென் படேல் அவர்கள் தண்டனைக் காலம் முடிவு அடையு முன்பு 8-ந் தேதி விடுதலை செய்யப்பட்டா ரென்று பெல்காம் செய்தியொன்றினால் தெரிகிறது.

### இங்கிலாந்தில் மீராபேன்

ஸ்ரீமதி மீராபென் 5-ந் தேதி லண்டனிலிருந்து பெர்மிங்ஹாமிற்குப் புறப்பட்டார். ஆங்கிலேயர்கள் ஹரிஜன, கதர் இயக்கங்களைப்பற்றி அறிய அதிகமான ஊக்கம் காண்பிக்கின்றார்களாம்.

### 20 டிக்கட்டிருந்த பிரயாணி

கும்பகோணத்திலிருந்து சென்னைக்கு வந்த ஒரு பிரயாணியிடம் 20 ரயில்வே டிக்கட்டுகளிருந்ததை விழுப்புரத்தில் கண்டு பிடித்து அப்பிரயாணியைக் கைது செய்து போலீசார் விசாரித்து வருவதாகத் தெரிகிறது.

### கதிர்வேலாயுதசாமி மகோற்சவம்.

கொழும்பு கதிர்வேலாயுதசாமிக்கு ஆடி 10ந் தேதி முதல் 13ந் தேதி வரையிலும் விமரிசையாக மகோற்சவம் நடைபெறு மென்று கொழும்பு நகரத்தார்கள் அறிவிக்கிறார்கள்.

### டெலிபோன் கட்டணம்.

சென்னை நகரில் டெலிபோன் கம்பெனி செண்டிரல் எக்ஸ்சேஞ்சைச் சுற்றி 4 மைல் விஸ்தீரணத்திலுள்ள டெலிபோன்களுக்கு மாதக் கட்டணத்தை 12 ரூபாயிலிருந்து 11 ரூபாய்க்குக் குறைத்துவிட சர்க்கார் உத்தரவளித்து விட்டனர். 1935 ஜனவரி 1-ந் தேதிமுதல் அமலுக்கு வரும் என்று தெரிகிறது.

### வெடிக்குண்டுப் பிரார்த்தனை தினம்

மகாத்மா காந்தி பூனாவில் போடப்பட்ட வெடிக்குண்டி லிருந்து தப்பியதால், காங்கிரஸ் காரியக் கம்மிட்டியின் தாற்காலிகத் தலைவரான சேத் ஜம்னலால் பஜாஜ் அவர்கள், இம்மாதம் 15-ந் தேதியை இந்தியாவெங்கும் பிரார்த்தனை தினமாகக் கொண்டாட வேண்டுமென்று அறிக்கை விட்டிருக்கிறார். அன்று மாலை எங்கும் 5 மணிக்குக் கூட்டம் நடைபெற வேண்டும்; அக்கூட்டங்களில் பேசுவோர் பலாத்காரத்தால் ஆபத்தே விளையுமென்பதனை விளக்க வேண்டுமென்று ஸ்ரீ பஜாஜ் கேட்டுக் கொள்கிறார்.

### ஜெர்மன் நிலைமை

ஜெர்மனியில் வெளிப் பார்வைக்கு சமாதானம்போல் தோற்றினும் உள்ளூரப் பகையும் வெறுப்பு மிகுந்து வருகிறது. 30 லட்சம் நாஜித் துருப்புகளில் பகுதிப்பேர் இம்மாதம் ரஜா முடிந்ததும் வேலைக்கு வரமாட்டார்கள். அவர்களில் பெரும்பாலோர் ஏமாற்றமடைந்து பொதுவுடைமைக் கட்சியில் சேர்கின்றனர். என்றாலும் ஹிட்லருக்கு, 1 லட்சம் துருப்புகள், ஜனரல் கொயரிங்கின் விசேஷப் படையைச் சேர்ந்த 12000 பேர்கள், ஹிட்லரைச் சேர்ந்த கருஞ் சட்டைச் சேனையாகியோரின் உதவி யிருக்கிறது.

---

## கால்விரல் போய்விடும்

---

### 10 லட்சம் வருடங்களுக்குப் பின் மனிதர் கதி

---

பத்து லட்சம் வருடங்கட்குப் பின் மனிதர் உருவம் என்ன மாறுதலடையும் என்பதுபற்றி ரோதர்ஹாம் பரிசோதனைச் சாலையின் டிப்யூடி டயரக்டரான மிஸ்டர் டி. வார்டு கட்லர் பேசியபோது குறிப்பிட்டதாவது:—

மனிதனின் உடம்பில் 10 லட்சம் வருடங்கட்குள் பெரிய மாற்ற மேற்பட்டுவிடாது. மனோ விகாசம் பெரிதும் ஏற்படுவதால் தலையின் முற்பாகம் கொஞ்சம் பெரிதாக ஆகிவிடும். இதைத் தவிர இதர பாகங்கள் பெருத்துவிடும், அல்லது சுருங்கிப் போகும் என்பதற்கில்லை. ஆனால் கால்விரல்கள் பிரயோசன மற்றவையாய்த் தோற்றுவதால் இனிவரும் மனிதர்கட்கு அவையில்லாது மறைந்துபடும். இங்ஙனமே வாலும் ஒரு காலத்திலிருந்து மறைந்து போனதுதான். இப்போதும்கூட எத்தனையோ குழந்தைகள் வாலோடு பிறப்பதைக் காண்கிறோம். இன்றைய மனிதர்கட்கு வால் தேவையில்லாத உறுப்பு; ஆதலால் டாக்டர்கள் அதனை வெட்டி விடுகிறார்கள்.



# பாரதியார்—ஓர் வீரத் தமிழர்

(நாராயணன்)

பாடிய வாய் தேனூறும் பாசுரப் பெருமழை பொழிந்து மறைந்து பட்ட கரு முகிலனைய ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பல அரும்பெரும் பாடங்களில் அஞ்சாமை அல்லது தைரியமுடைமை என்பது ஒன்றாகும். அஞ்சாமையைப்போல் மானிடர்க்கு அரிய பொக்கிஷமில்லை. ஆபத்காலங்களில் ஆட்கொள்ளுவதும் அண்மையில் நிற்கும் விபத்தை அகற்ற முயல்வதும், அறிவைப் பெருக்கி அகத்தைச் சுத்தம்செய்வதும் அஞ்சாமை அல்லது தைரியமுடைமை யொன்றே. ஆங்கிலப் புலவர் திலகமெனப் போற்றத்தகும் டாக்டர் ஜான்சனிடம் ஒரு நாள் சில நண்பர்கள் வினவியபோது அவர் “மக்களுக்கிருக்க வேண்டிய குணங்களில் முதன்மை பெற்றது தைரியமாம்” என்றார். அந்தக் கூற்று நண்பர்கட்குப் புதிதாய்த் தோற்றியதால், விழித்துவிட்டு, அவ்வாறு கூறக்காரணம் என்னவென்றார்கள். டாக்டர் ஜான்சன் “தைரியமென்ற கோட்டையில்லையானால் எவ்வாறு உங்களால் வாய்மை, அடக்கம், பொறுமை என்கின்ற குணங்களை யெல்லாம் காக்கமுடியும்?” என்று பதில் கூறினாராம்.

இத்தகைய கொள்கையுடன் கவி பாரதி வாழ்க்கை நடாத்தினார் என்று நன்கு காணலாம். “பாப்பாப் பாட்டு” என்ற குழந்தைகளுபதேசத்தில் புலவர் “ஓடி விளையாடவேண்டும், சதா கூதுகலமாயிருக்கவேண்டும், எல்லோரோடும் அன்பாயிருக்கவேண்டும்; ஜாதி வித்யாசம் பாராட்டக்கூடாது, கண்ணில் தென்படுபவைகளெல்லாம் சகோதர பாத்தியமுடையவைகள்” என்பன போன்றமேலான பல மொழிகளைக் கூறிவிட்டு இறுதிக்கண்

வயிரமுடைய நெஞ்சு
வேண்டும்—இது
வாழுமுறைமையடி பாப்பா

என்று திருவாய் மலர்ந்தருள்கின்றார். வயிரமுடைய நெஞ்சே வாழ்வு முறையென்று கூறும் செந்தமிழ்த்தீஞ் சொற்களில் ஆசிரியர் ஜான்சனின் அரிய தத்துவம் அடங்கியிருக்கவில்லை யென்று ஆரே அறைவர்?

மேலும் நடிப்புச் சுதேசிகள் என்ற செய்யுட் தொகையில், ஓரிடத்தில்,

நெஞ்சி லூரமுமின்றி
நேர்மைத் திறமுமின்றி
வஞ்சனை செய்வாரடி—கிளியே

*　　*　　*

என்பதைப் பார்க்க. இப்பாட்டில் நெஞ்சில் உரமில்லாததாலேயே (தைரியமின்மையாலேயே) நேர்மையாயிருக்கும் மனப்பான்மை யற்றுப்போய் வஞ்சனை, சூழ்ச்சி, கபடம் முதலிய வற்றிலிறங்குகின்றார்களென்று தெற்றென விளங்கவில்லையா?

இப்படிப் பாரதியார் வீரத்தைச் சிறப்பித்துக் கூறும் இடங்களெத்தனை? உலகையெல்லாம் பார்த்து சக்தியை, பராசக்தியை வணங்குங்கள், அதனையே பணிந்து நடவுங்கள் என்று கூறுமிடங்கள் எத்தனை? “சக்தி தனக்கே கருவியாக்கு” என்று அறையும் சந்தர்ப்பங்கள் எத்தனை? நம் கவிச்சிங்கம் சக்தியைத்தான் எத்தனை நாமங்களில் எத்தனைப் பாக்களில் பாடுகின்றார்? அன்றி, பராசக்தியையே தன் இஷ்ட தேவதையாக அமைத்துக் கொண்டது தெரியாத இரகசியமா? சுதந்திரத்திலும் கூட வீரச் சுதந்திரம் பெறுவதன்றோ பாரதியாரின் குறிக்கோள்! மாயையைப் பார்த்துக் கூறுமோரிடத்தில்...............

மாயையே—மனத்
திண்மையுள்ளாரை நீ செய்வது
மொன்று முண்டோ?

என்று கூறுமிடத்தைப் பார்க்கின் மனத்திண்மைக்கு வைத்திருக்கும் மதிப்பிற்கு அளவுகூற முடியுமா? அந்த மனப் பான்மையி லெழுந்தவைகளாக வன்றோ இருக்கவேண்டும்‘நையப்புடை, ஏறுபோல்நட, கோழைபட வாழேல்’ என்ற மொழிகளெல்லாம்? புதுமைப் பெண்ணென்ற செய்யுளில், பண்டைப் புலவர்கள் எல்லோரும் பெண்ணுக் கணிகலனென்று போற்றிவந்த நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற குணங்களைத் தூவெனத்தள்ளி விட்டு வீர வாழ்வே பெண்கட்கு வேண்டுமென்று கூறுவனவாகிய,

பூணு நல்லறத்
　தோடிங்கு பெண்ணுருப்
போந்து நிற்பது
　தாய் சிவ சக்தியாம்
நாணு மச்சமும்
　நாய்கட்கு வேண்டுமாம்!
ஞான நல்லறம்
　வீரச்சுதந்திரம்!

என்ற அடிகளையும்,

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட
　பார்வையும்
நிலத்தில் யாவர்க்கு மஞ்சா
　நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கு
　மிருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ
　தில்லையாம்,

என்ற வீரமொழிகளையும் பார்த்து உணர்ச்சி கொள்ளாதார் யாரிருக்க முடியும்?

இங்ஙனம் வீரமே சிறந்த புருஷார்த்தம் என்று நினைக்கும் பாரதியாருக்கு இந்தியர் கோழைத் தனத்தைப் பார்த்தால் நெஞ்சு பொறுப்பதில்லை. ஆதலால் பன்னிப் பன்னி,

நெஞ்சு பொறுக்குதில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்
[டால்
அஞ்சி அஞ்சிச் சாவார்—அவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே

என்று பாடிப்பாடி வருந்துகின்றார்.

பாரதியார் இவ்வாறு அஞ்சாமையைப் போதித்து விட்டுத் தாமோர் கோழையாய் வாழ்ந்து விட வில்லை. எதைக் கூறினாரோ அதனை நடை முறையிலும் காண்பித்து வந்தார். காலம்சென்ற லாலா லஜபதிராய் “மூன்றாவது தரத்தினரான ஒரு ஜாதி அரசியல் வாதிகள் வாயினால் எல்லாம் சொல்வார்கள்; ஆனால் தாமொன்றையும் செய்ய மாட்டார்கள்; அவர்களைச் சேர்வார்கள்தான் தென்னாட்டுப் பார்ப்பனர்” என்று கூறினார் ஒரு காலத்தில். நம் பாரதியாரோ ஸ்ரீராயைத் தோற்கடித்து விட்டார் ஒழுக்கத்தால்,

பாரதியாரின் தோற்றத்தில், கண் பார்வையில், எண்ணத்தில், எழுத்தில், பேச்சில், நடையில் எல்லாம் வீரச்சுவை மல்கியிருந்தது. நான் ஒரு முறை புதுச்சேரிக்குச் சென்றிருந்த காலையில் ஒரு நண்பர் பாரதியாரைக் காண்பித்துத் தருவதாகக்கூறிக் கடற்கரை ரஸ்தாவொன்றுக்கு அழைத்துப் போனார். நாங்கள் ஓரிடத்தில், ரோடோரத்தில் சில நிமிஷ நேரம் நின்றதும் வீரம்பொலிந்த—ஆனால் கவலையிலா உருவத்தில்—ஓர் மனிதன் செல்வதைக் கண்டோம். உடன் என் நண்பர் "அதோ வருபவர்தான் பாரதியார்" என்றார். நான் கணமும் தாமதியாது கை கூப்பிவணங்கினேன். வணங்கியதுதான்; என்னைப் பார்த்தார் ஒரு பார்வை கண்ணால்! அப்பார்வையை எதிர்த்து நிற்க முடியவில்லை; தலையை மெதுவாக அப்பாலெடுக்க முயன்றேன். அப்போது திடீரெனப் பாய்ந்து என் கையைப் பிடித்தார் கவிஞர். நான் திடுக்கிட்டு நடுங்கினேன். உடன் நகைத்துக் கொண்டு 'நீ கோழை. கோழை வாழ்தற்குரிய வனல்லன். தைரிய மெய்தாத வரையில் நீ இந்தியனல்லன்' என்று சொல்லி, பகவத் கீதையிலுள்ள ஒரு சுலோகத்தைப் பாடிக் கொண்டு போனார்.

பாரதியார் சக்தி வணக்கம் வீரவடிவேலன் போன்ற பாசுரங்களைப் பாடும்போது பக்கத்தில் நிற்கும் பலர் பயந்து போயிருப்பதாகப் பல நண்பர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒருமுறை செட்டிமார் நாட்டில் புலவர் தங்கியிருந்தபோது ஒரு நாளிரவு 8 மணிக்கு, சுமாராக நிலா வீசிக் கொண்டிருக்கையில், சில நண்பர்களோடு ஒரு காட்டுக்குள் நடந்தார். இராமநாதபுரம் ஜில்லாக்காடுகள் முள்ளடர்ந்ததென்பது நண்பர்கட்குத் தெரியுமன்றோ? ஆதலால் உடன்சென்ற செட்டியார்களில் சிலர் அஞ்சிச் செல்லவில்லை. சென்ற சிலருங்கூட முன்னடக்கத் துணியவில்லை. ஆனால் பாரதியாரோ சலிப்பெய்தாது தான் முன்னடிச் செல்வதாகக்கூறி நடந்தார். பின்னால் 10 பேர் போனார்கள். சற்றுத் தூரம் போனதும் அவரது காலில் ஓர் பெரிய கல்லிடறிப் பெரு விரலில் படுகாயமேற்பட்டு இரத்தம் வடியத் தொடங்கியது. பார்ப்பதற்கே அச்சத்தை யுண்டு பண்ணிய இரத்தப் பெருக்கைக்கண்டு சிலர் துணியினால் கட்டுவதாக முன் வந்தார்கள். ஆனால் பாரதியாரோ சற்றுமே பொருட்படுத்தாது, முகத்தில் இனைத்துணையாவது மாற்றமும் காண்பியாது நெடுக நடந்தார்.

பாரதியார் துன்பமேற்படும்போது மட்டிலுமல்ல; எப்போதுமே, வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதிகளிலும் மனிதன் வீரத்தைக் காண்பித்து அதிலீடுபடவேண்டுமென்பார். ஆகையினாலே தான் ஏறுபோல் நடவென்றும், நிமிர்ந்த பார்வை வேண்டு மென்றும் உபதேசிப்பது. ஒருநாள் காரைக்குடியில் கவிஞர் பலகாரம் சாப்பிட உட்கார்ந்தபோது ஒரு நண்பர் கொஞ்சம் முறுக்கைக் கொணர்ந்து வைத்தார். அதனைப் பலர் சாப்பிட, பாரதியார் மட்டிலும் கையிலெடுக்கும் துண்டுகள் ஒவ்வொன்றையும் பலம் பட வெடுத்து, பலம்பட நொறுக்கி, பலம் பட மென்று கொண்டிருந்தார். அதுகண்டு பக்கத்திலுட்கார்ந்திருந்த ஒருவர் நகைத்து விட்டார். உடன் கவிஞர் திலகம் "நாடு கோழை இந்தியரை வேண்டவில்லை. வீரர்களும் திண்மையாளருமே வேண்டும். எந்த விஷயத்திலும் ஊக்கமும் பலமும் காண்பியாதவன் வாழ்வில் சிறக்க முடியாது. பலத்தைப் பெருக்குவதில் காண்பிக்கும் ஊக்கம் ஈசனை அடைய முயல்வதற் கொப்பாகும்' என்றார். இன்று டாக்டர் மூஞ்சே "இந்தியர் ஒவ்வொருவரும் வீர வாழ்க்கை பழகவேண்டும்; வழி நடக்கும் போதெல்லாம் கையில் ஒரு கழியையேனும் கொண்டு செல்லவேண்டும்" என்று கூறும் தத்துவத்தைப் பல வருடங்கட்கு முன்னடியே வீரத் தமிழர் பாரதியார் பலபடியாகக் கூறியிருக்கின்றாரன்றோ?

# எப்போது யுத்தம் வரும்?

"பிரிட்டன் உலக சமாதானத்தின் திறவுகோலைக் கையில் வைத்திருக்கிறது. வெளிப்படையாக அது பிரான்ஸ் தேசத்தோடு நட்புப் பூண்டுவிட்டதானால் பல வருடங்கட்கு யுத்தம் வாராமற் போய்விடும். இங்கிலாந்து நடுநிலைமை வகிக்குமென்று ஜர்மனி நினைக்கும்படி செய்து விட்டால், அடுத்த நிமிஷத்தில் ஜெர்மனி யுத்தத்தைத் தொடங்கிவிடும்" என்று எச். ஆர். நிக்கர்பாக்கர் என்பவர் "தி பாயிலிங் பாயிண்ட்" என்ற அமெரிக்கப் பத்திரிகையில் எழுதி யிருக்கிறார். அவர் உலகில் பல தேசங்களையும் சுற்றி, ஆங்காங்குள்ள தலைவர்களைப் பார்த்துப் பேசினாராம்.

ஜீக்கோ ஸ்லோவியாத் தலைவராகிய மாஸாரிக்கினிடம் வினவியபோது "பணமில்லை; ஆகவே, யுத்தம் வரவழியில்லை" என்று பதில் கூறினாராம்.

ஹங்கேரித்தலைவர் உரைத்த பதில்: "யுத்தமில்லை. அது மிகவும் கஷ்டமானதல்லவா?" என்பதாம்.

### பல்கேரிய அரசர் பதில்

சென்ற யுத்தத்தின் ஞாபகமிருக்கும் மனிதர்களின் ஆறிக்க மிருப்பது வரையிலும் யுத்தம் வாராது.

ஆனால், முஸோலினி மட்டிலும் 'இன்னும் பத்து வருடம் சமாதானம் நிலைத்திருக்கும்' என்று கூறினாராம்.

### சர்ச்சிலின் பயம்

சர்ச்சில் கூறியதாவது:—

நான், இங்கிலாந்தைப் பயப்படுத்துவதற்கான சாதனங்கள் ஜர்மனியின் கையில் போய் விடுமோவென்று பயப்படுகிறேன். அவ்வாறு போகும் காலம் ஒரு வருடம் அல்லது 18 மாதமாகவே இருக்கும்.

பிரான்ஸ் அயல்நாட்டு மந்திரி -பார்தோ:—ஒரு வருடத்திற்கு முன்பு நான் 1934-ல் பெரும்பான்மையும் வாராது என்றெழுதினேன். இன்று அதுகூடச் சொல்ல முடியவில்லை.

பொதுப் படையாக எல்லோரும் "ஹிட்லரைப் பொறுத்திருக்கிறது. யுத்தம்" என்றார்கள்.





# ஜப்பான் கன்னியும் கல்யாண முறையும்

## மேனாட்டு நாகரிகத்தோடு பழமை விரும்பிகளின் போர்

இந்தியாவில் மேனாட்டு நாகரிகத்தைக் கைக் கொள்ளுவதில் இருவித அபிப்பிராய மிருந்து வருவது போல், ஜப்பானிலும் முரண்பட்ட கருத்து இருந்து வருகிறது. சிலர் பூர்வீக முறையே புனிதம் என்கின்றனர்; வேறு சிலர் நவீன வாழ்வே நலம் என்கின்றனர். இவ்விரு சாரார் கூற்றும் எதிரெதிராக வேலைசெய்து வந்தாலும் பொதுவாக ஜப்பானியப் பெண்கள் நிலைமை மிகவும் சீர்ப்பட்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

### நவீன சுந்தரிகள்

இன்று நீங்கள் டோக்கியோ நகரம் (ஜப்பானின் தலைநகரம்) சென்று ஒரு சனிக்கிழமை அல்லது ஞாயிற்றுக்கிழமை மாலையில் பார்த்தீர்களானால், அநேகம் யௌவனப் பெண்கள்—எல்லோரும் 20 வயதிற்குக் கீழ்ப்பட்டவர்களா யிருக்கலாம்—ஐரோப்பிய நாகரிகத்தில் தோய்ந்து அதன்மீது புரண்டவர் போல "செட் செட்டாக"ப் போவதைக் காண்பீர்கள். அவர்கள் அணிந்திருக்கும் துணிமணிகளெல்லாம் மேனாட்டில் செய்யப்பட்டவையாயிருக்கும். அவற்றை அணிந்திருக்கும் மாதிரியும் ஐரோப்பியச் சுவை யுடையதாகவே யிருக்கும். பாரிஸ், லண்டன், ஹாலிவுட் ஆகிய நகரங்களைப் பார்த்திருந்தால் அங்குள்ள பெண்கள்தான் செல்லுகின்றார்களோ வென்று சந்தேகப்பட்டு விடுவீர்கள். அவர்களுடன் சிலகால் சில யௌவன புருஷரும் செல்லலாம். நன்றாகக் கவனித்தீர்களானால், அவர்கள் ஒரு சமயம் ஹோட்டல்களில் புகுந்து தேநீர் பருகிப் பேசி மகிழ்வதையும் இன்னொரு சமயம் சினிமாக் கொட்டகை யடைந்து படம் பார்த் தின்புறுவதையும் காண்பீர்கள். இத்தகைய நவநாகரிகப் பெண்கட்கு "மோக" என்று பெயர். 'மோக' என்றால், நவீனப் பெண் என்பது பொருள். இதேபோல நவீன புருஷர்கள் 'மோபோ' என்று அழைக்கப்படுகிறார்கள்.

மோகாக்கள் வெளிப்படையாக சிகரெட் பிடிப்பார்கள்; சிற்சில வேளைகளில் குடிப்பார்கள். அவர்கட்கு வெட்கமோ,நாணமோ இருப்பதில்லை.ஏதாவது, யௌவனப் புருஷனைக் கூடிக்கொண்டு "இவனையே மணப்பேன்; காதல் கல்யாணத்தால் நாங்கள் ஒன்று சேரப் போகிறோம்" என்று கூறிப் பெற்றோர்கட்கு வருத்தத்தைக் கொடுப்பார்கள். இத்தகைய வாழ்வுமுறையால் அவர்களுக்குச் செலவு ஜாஸ்தியாகின்றது;எனவே காப்பி ஹோட்டல்களில் வேலைக்காரிகளாகவும், நாடக ஆக்டர்களாகவும் பிற தொழில்களிலும் ஈடுபடுகின்றனர்.

### பழமை விரும்பிகள்

இவ்வாறு நவீன மாதிரியில் பெண்கள் வாழ்வது நன்மையோ தீமையோ எதுவானாலும் சரி, பண்டைக் கொள்கைகளை நயக்கும் ஜப்பானியர் இவர்களை சமூகத்திற்கே ஒரு தொத்து நோய் என்று கருதுகின்றனர். பழமையை விரும்பும் ஜப்பானியப் பெண்கள் நகரத்துக்குள் அனாவசியமாகச் சுற்றி யலைவதில்லை. அவர்களின் பொழுதில் பெரும்பகுதி பள்ளிக்கூடத்தில், சமையல் முறை, இல்வாழ்க்கை முறை, பூச்செடிகள் வைக்கும் முறை, விருந்தினரை உபசரிக்கும் முறை, சாஸ்திரீயமான ஆடல்பாடல்கள் முதலியவற்றைப் பயில்வதில் செலவிடப்படுகின்றது. வீட்டில் அபூர்வமாகவே சகோதரி சகோதரர்களோடு விளையாடித் தாம் நச் சிரமபரிகாரம் செய்ய இடம் கொடுப்பார்கள்.

இத்தகைய கன்னிகைகட்குப் பூர்வீகப் பெண்கள் முறை பயிற்றப்படும். அப்பெண்கள் முறையில் முக்கியமானவை பொறுமை, அடக்கம், தந்நலத்தியாகம், சொற் கேட்டல் முதலியவைகளாம். அவர்களெல்லோருக்கும் கல்யாணம் செய்தல், குழந்தைகளைப் பெறுதல் ஆகிய இரண்டும் சமூகத்திற்குப் பெண்கள் செய்யவேண்டிய தொண்டென்பது கருத்து. ஆதலால் சுயேச்சை விருப்பமும், சுதந்திர வேலைத் தேட்டமும் அவர்களால் அநாசாரமென்று எண்ணப்படுகின்றன. குழந்தைப் பருவம் முதல் "புருஷன் எஜமானன்; பெண்கள் அடிமைகள்; புருஷர்கட்குத் தொண்டு செய்வதே பெண்கள் கடன்; கல்யாணக் காலம் வருவது வரையிலும் புருஷனைப் பார்ப்பது தவறு" என்று பயிற்றப்படுகிறது. ஆதலால் காதற் கொலைகள் ஏராளமாய் ஜப்பானில் நடைபெறுகின்றன. என்றாலும் பழைய முறையை மிகத் திறமையாகப் பெற்றோர் கையாளுகின்றார்கள்.

### கல்யாண ஏற்பாடு

தாய் தந்தையர் கல்யாண ஏற்பாடு செய்தல், தம்பதிகளே நிச்சயித்துக்

கொள்ளுதல் என்ற இருவித வழக்கமும் ஜப்பானிலிருந்தாலும் நாளேற ஏறப் பெற்றோர் தலையீடு அழிந்துகொண்டு வருகிறது. உயர்ந்த வகுப்பாரி னிடையிலும், பெரிய பட்டதாரிகட்குள்ளும் பெரும்பான்மையும் பெண்ணும் புருஷனும் திருமணத்தை நிச்சயித்துக் கொண்டு, பின்னுடிப் பெற்றோர் சம்மதத்தை எதிர்பார்க்கும் வழக்கத்தை அதிகமாகக் காணலாம்.

அடுத்தபடியாக மணப் பெண் எக் குடும்பத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றாள் என்ற பிரச்சினை முக்கியமானதாகும். அந்நியக் குடும்பங்கள் பல கல்யாணத்தால் ஒன்று படுவதுண்டு; என்றாலும் அதிகமாக அங்ஙனம் நடைபெறுவதில்லை. இதன் காரணம் பெண்கள் தாராளமாக வெளியே போகாதிருப்பதும் பழங் கொள்கை ஊக்கம் பெற்றிருப்பதுமாம். வெளிநாடுகளிற் போல, பெண்கள் தம் சமவயதுடைய வாலிபர்களோடு பழகவும் அப்பழக்கத்தைக் காதலாக மாற்றிக் கொள்ளவும் சந்தர்ப்பம் ஏற்படுமானால் ஏராளமான தூரக் குடும்பங்கள் இணையுமென்று நம்பலாம்.

### விவாக விடுதலை

மேற் சொன்னவாறு ஜப்பானில் பல தம்பதிகள் காதற்கயிற்றால் இணைக்கப்படாது போவதால் விவாகரத்து ஏற்படுவது அதிகமாம். பத்திரிகை படிப்போர், ஜப்பானில் எவ்வளவு ஏராளமாக விவாகரத்து நிகழ்கின்ற தென்பதை நன்றாக அறிவார்கள். அமெரிக்கா மட்டிலும் மாய்ந்து விடுமானால் ஜப்பானே விவாகரத்து விஷயத்தில் முதன்மையாக நிற்கும். இந்த விடத்தில் வாசகர்கள் அறிய வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதாவது ஒரு பெண் புருஷனை நீக்க வேண்டுமென்று நினைத்தாளானால் பெரும் பான்மையும் ஏலாது போகும்; ஆனால் புருஷனுக்கோ காரணமிருந்தாலும் காரணமில்லாமற் போனாலும் எந்தப் பெண்ணையும் எளிதல் தள்ளி விடலாம். இந்த அநீதத்தோடு விவாக பந்தம் அற்றுப் போகுங் காலையில் பெண்கட்குக் குழந்தைகளை வைத்துக் கொள்ளுமுரிமையுமில்லாமற் போய் விடுகின்றது. இந்த அநீதிகள் நீங்க வேண்டுமென்றால் பெண்கட்குச் சுதந்திரமும் ஓட்டுரிமையும் ஏற்பட வேண்டும்.

### தோழமை யுணர்ச்சி

மேனாட்டார் ஜப்பான் இல்வாழ்க்கை முறையைக் கண்டால் வெறுப்புக் கொள்வார்கள். ஏனெனில் தம்பதிகட்குள் சரியான தோழமை யிருப்பதில்லை. புருஷன் உயர்ந்தவ (எஜமா)னென்றும் பெண் தாழ்ந்தவளெ (அடிமையெ)ன்றும் எண்ணமிருப்பின் எவ்வாறு தோழமையை எதிர்பார்க்கலாம்?

மேனாட்டார்கள் குழந்தைப் பேற்றை அதிகமாக விரும்புவதில்லை; குழந்தைப் பேற்றினால் வாழ்க்கை முறையிலும் பெரிய மாற்ற மேற்படுகின்றது; ஆனால் ஜப்பான் தம்பதிகட்குக் குழந்தைப் பேறு ஒருவித களையாகியுதவுவது குறிப்பிடத்தக்கது.

## கதரே கருந்தனம்!





# தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கூட்டம்

## தேர்தல் வேலையைக் கவனிக்க அங்கத்தினர்

### உயிர்த்தியாகம் செய்தவர்கட்கு உருவப்படங்கள்.

தமிழ்நாடு காங்கிரஸ் காரியக்கமிட்டி ஜூலை 6-ந் தேதி திருச்சியில் நடைபெற்றது. திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் முதலிய பல தமிழ்நாட்டுத் தலைவர்கள் விஜயம் செய்திருந்தனர். தேசியப் போராட்டத்தின் பொழுது மக்கள் செய்த தொண்டைப்பாராட்டியும் உயிர்துறந்தோரின் உருவப்படங்களைத் திறந்து வைக்கப்படவேண்டு மென்றும் சென்ற போராட்டத்தில் தொண்டர்களாய்ச் சேர்ந்தோரின் பெயர்களைச் சென்னைக் காங்கிரஸ் மண்டபத்திலுள்ள ஞாபகார்த்தச் சின்னத்தில் சேர்ப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது. மற்றொரு தீர்மானத்தால் அடுத்த செப்டம்பர் மாத வாக்கில் கோயமுத்தூரில் மாகாண காங்கிரஸ் கமிட்டியையும், மகா நாட்டையும் கூட்டுவதெனவும், மதுரை திரு. எ. வைத்யநாதய்யர், நாமக்கல் திரு. வெங்கிடாசல ரெட்டியார், திரு. என். எஸ். வரதாச்சாரி ஆகியவர்களைக் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு தேர்தல் கமிட்டியின் கூட்டு அங்கத்தினர்களாக நியமிப்பதென்றும், அடுத்துவரும் தேர்தல் சம்பந்தமான பிரசாரம் நடத்துவதற்கு திரு. ராஜகோபாலாச்சாரியாரைத் தலைவராகவும், திரு. பக்தவத்சலத்தைக் காரியதரிசியாகவும், திரு. வைத்திநாதய்யர், வெங்கிடாசலம்ரெட்டியார், வரதாச்சாரியார், கே. பாஷியம், ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி ஆகியவர்களை அங்கத்தினர்களாகவும் கொண்ட கமிட்டி யொன்றை ஏற்படுத்துவதெனவும் முடிவு கட்டினார்கள்.

**தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கூட்டம்**

அன்று (ஜூலை 6-ந் தேதி) பிற்பகல் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் தலைமை வகித்தார். முதலில் காங்கிரஸ் மாஜி தலைவர்களான சர். சங்கரன் நாயர், ஹாசன் இமாம், டாக்டர் அன்னிபெசண்ட் ஆகியோரும் ஏ. ரங்கசாமி ஐயங்கார் உள்ளிட்ட ஊழியர்களும் தேகவியோகமானதுபற்றி அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. பின்1931-32-33-34 ஆகிய வருடங்களில் தேசியப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கட்கு நன்றி தெரிவிக்கப்பட்டது. பின்பு, பாட்னாத் தலைவர்கள் முடிவை அங்கீகரிப்பதாகவும், ஆகஸ்டு 15-ந் தேதிக்குள் 4 அணைச் சந்தாதாரர்கள் சேர்க்கப்பட்டு மெம்பர்கள் ஜாப்தாவை 22-8-34-க்குள் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி ஆபீசுக்கு அனுப்புவதென்றும், அவ்வாறு சேருகிறவர்களைக்கொண்டு டவுன், தாலூகா, ஜில்லா, மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்குத் தேர்தலை ஆகஸ்டு 27-க்குள் நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. அப்பால் மாகாண மகாநாட்டைக் கோயமுத்தூரில் செப்டம்பர் 16-க்குள் கூட்டுவதென்று தீர்மானித்துவிட்டு அடுத்து வரும் தேர்தலைக் கவனிக்க அடியில் வரும் ஜில்லாக்களுக்கு அடியில் வரும் அன்பர்களை நியமித்தது:—

ஜில்லா — கவனிப்பவர்

சென்னை :—திரு சத்தியமூர்த்தி.

செங்கற்பட்டு :—திரு. ஸி. என். முத்துரங்க முதலியார்.

வட தஞ்சை :—டாக்டர் சாம்பசிவம்.

வட ஆற்காடு :—திரு. டபிள்யூ. எஸ். ஸ்ரீநிவாச ராவ்.

திருச்சி :—டாக்டர் டி. வி. எஸ். சாஸ்திரி.

திண்டுக்கல் :— திரு. பட்டாபி ராமய்யா.

மதுரை :—திரு. ஏ. வைத்தியநாதய்யர்.

காரைக்குடி :—திரு. உடையப்பா.

ராமநாதபுரம் :—திரு. பி. எஸ். குமாரசாமி ராஜா.

திருநெல்வேலி :—திரு. கே. பி. எக்ஞேஸ்வர சர்மா.

கோவை :—திரு. வேலப்ப நாயக்கர்.

சேலம் :—திரு. வெங்கடாசலம் ரெட்டியார்.

தென் தஞ்சை :—திரு. வேதரத்னம்.

தென் ஆற்காடு :—திரு. தேவநாயகய்யா.

கடைசியில் திரு. புலாபாய் தேசாய் சற்று நேரம் பேசினர். அப்பால் காரியக் கமிட்டி தீர்மானித்தபடி பார்லிமெண்டரி போர்டின் நியமனக் கமிட்டிக்கு அங்கத்தினர்களாகத் திருவாளர்கள் ஏ. வைத்யநாதய்யர், கே. வி. வெங்கடாசலம் ரெட்டியார், என். எஸ், வரதாச்சாரியார் ஆகிய மூவரையும் தேர்ந்தெடுத்தது.



அகமதாபாதில் நடைபெற்ற பொதுக்கூட்டம். முதல் வரிசையில் மகாத்மா காந்தியும் அப்பாஸ்தயாப்ஜியும் காணப்படுகின்றனர். இரண்டாவது வரிசையில் (வலப்புறம்) அகமதாபாத் முனிசிபல் தலைவர் தாகர் பாபா உட்கார்ந்திருக்கிறார். S. P. B.

## விஷயமொன்று; ஆனல் ஆள் வேறு

(டெம்பரரி எழுதுவது)

---

டில்லியிலுள்ள

ஹபிப் நூர் என்ற பழ வியாபாரி யொருவர் தம் வேலையோடு வேலையாக குலாம் ஹுசேன் என்ற ஒருவரின் மனைவியோடு கொஞ்சம் ஆடல் பாடல் புரிந்துவந்தாராம். இந்த இரண்டு வேலை யையும் ஏககாலத்தில் செய்ய அவரால் எப்போதும் சாத்தியப்படவில்லை. ஆதலால் ஒரு ஒழுங்கு, முறையின்றி அவகாசம் கிடைத்ததற்கொப்ப, இரண்டிடத்தும் கவனம் செலுத்திவந்தார்.

இவ்வாறு ஹபிப் நூர் மிகவும் சிரமப் படுகிறுரென்பது குலாம் ஹுசேனுக்குத் தெரியும். ஆதலால் என்றைக்காவது ஒரு நல்ல பரிசு—"பெரிசாக"க் கொடுக்கவேண்டுமென்று ஒரு நல்ல நாளைத் தேடிக் கொண்டிருந்தார் குலாம்.

ஒரு நாள் ஒரு வெள்ளிக்கிழமை யன்று—வெள்ளிக்கிழமை முஸ்லிம்களுக்கு ஒரு புனித நாளல்லவா?—குலாம் ஹுசேன் மசூதி சென்று ஆண்டவனைப் பணிந்து விட்டு மெதுவாக வீடு நோக்கி நடந்தார். வீட்டில் இல்லாள்—அவளுக்கும் அன்று புனித தினமென்பது தெரியுமல்லவா? ஆதலால்—தன் ஆசைக் காதலன் நூரிேனுடு உல்லாச உலகில் உலாவிக் கொண்டிருந்தனள். பார்த்தான் குலாம்ஹுசேன். உடம்பெலாம் கோபவிஷமேறி விட்டது. எனவே பரிசுக்காக வைத்திருந்த கத்தியை நூரின் உடம்புக்குள் புகுத்தினான். சில நிமிஷங்களில் நூர், ஹுசேன் திடீரெனக் கொடுத்த பரிசின் கனம் பொறுக்க முடியாமல் வாயைப் பிளந்து விட்டான். அப்பால் வெகுமதி கொடுக்கவேண்டுவது மனைவிக்கு? அவள் என்ன மாயாஜாலம் செய்தாளோ? அவளை விட்டுவிட்டான். இது பெரிய அநீதியல்லவா?

போலீசார்கள் தெரிந்துகொண்டார்கள் இந்த அநீதியை! உடனே ஹுசேனைப் பிடித்துத் தங்கள் கூடத்திற்குக் கொண்டு சென்று விசாரித்தார்கள். அவன் நிகழ்ந்தவற்றைக் கூறினான். இந்த உண்மை கூறுதலென்னும் நல்ல குணத்திற்கு மாஜிஸ்திரேட்டால் என்ன வெகுமதி அளிக்கப்பட்டதென்று நமக்குச் செய்தி எட்டவில்லை. எதையாவது கொடுக்கட்டும்.

சற்றேறக்குறைய

இச் செய்தி நடந்த அதே சமயத்தில் கங்கை கொண்டானுக்குப் பக்கத்திலுள்ள குப்பக்குறிச்சி யென்ற ஊரிலும் அதன் பிரதி பிம்பம் தெரிந்தாற் போல ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இரண்டினுடையவும் சாரம் ஒன்றெனினும் ஈடுபட்டவர்களின் பால் வேறு; நிறம் வேறு; ஜாதி வேறு; மதம் வேறு.

குப்பக்குறிச்சித் தேவசகாயத்தேவன் என்பவன் தன் உணர்ச்சிப்போக்குக்குச் சகாயமாயிருக்கும்படி பள்ள வகுப்பைச் சேர்ந்த அன்ன பாக்கியம் என்பவளின் காதல் பாக்கியத்தை நுகர்ந்து வந்தானும். சில நாள் நுகர்ச்சி நிகழ்ந்து வரவும் அவனுடைய வீட்டு மனைவியான வெள்ளத்தாயம்மாளின் மனம் கொள்ளத் தயாரில்லாது போயிற்றும். எனவே மெள்ளக் கோபத்தாலெழுந்து பள்ளப் பெண்மேல் சீறி யொருகத்தியால் குத்தி விட்டாளாம், அப்பால், அவளோடு சேர்ந்து தனக்குத் துரோகம்செய்த புருஷனையும்கண்டிக்க வேண்டாமா? அப்படிச் செய்யவில்லையாம் (ஹுசேனைப்போல.) ஆகவே போலீசார்—தமிழ்ப் போலீசார்—இங்கும் தோன்றி விசாரித்து வருகிறுர்களாம். மாஜிஸ்திரேட் இங்கும் தன் வாயைத் திறக்கவில்லையாம்.

ஆனல் ஒன்று.

டில்லி ஹுசேனைப்போல வெள்ளைத்தாயம்மாளுக்குக் குத்தத் தெரியவில்லை? காரணம் பெண்ணென்பதோ அல்லது ஹிந்துவென்பதோ—எதுவானாலும் சரி—பள்ளப்பெண்ணுகிய அன்னபாக்கியத்தின் அன்னம் அற்றுப் போகவில்லை. இப்போது வண்ணரப்பேட்டை ஆஸ்பத்திரியில் டாக்டருதவியால் சுகம் அடைந்து வருகிறுள்.

## மாமாவின் கடிதம்

மாப்பிள்ளை மீது சீற்றம் கொண்ட மாமனர் படபடப்பாக எழுதுவது :—

அடே சீனு,

மங்களத்திற்கு, சொன்னபடி நகை போடவில்லை; ஆதலால் அவள் கழுத்தில் கயிற்றைக் கட்டிக் கொன்றுவிடுவேன் என்று ராமசாமியிடம் சொன்னயாமே. அவள் கழுத்தில் ஏற்கனவே நான் போட்ட சங்கிலி கிடக்கக் கயிற்றைத் தேடுவேண்டுவது ஏன்? மேலும் நான் அவள் கைக்குக் கொலுசு போடவில்லையா? காலில் வளைகள் போடவில்லையா? இடுப்புக்கு வேட்டி கொடுக்கவில்லையா? அவ்வப்போது தட்டுமுட்டுக் கொடுக்கவில்லையா? வேறு என்ன அழவில்லை?

நீ தங்கப் "புருச்" வாங்கி வாவென்று அவளைத் தொல்லை செய்வதாக ராமசாமி சொல்லக் கேள்விப்பட்டேன். அடே முட்டாளே! உனக்கு எதுக்கடா புருசு? ஒரு சிறு சித்திரம்—பன்றி, கழுதை, குரங்கு—கூட எழுதத் தெரியாதே. அப்படியிருக்க யெதுக்கு புருசு? அதிலும் தங்கப் புருசு வைத்துத்தான் எழுதுவாயோ?

அடுத்தபடியாக, பாட்லா என்று ஒன்று வாங்கி வா நீ குழந்தையை வற்புறுத்தினுயாம். உனக்குப் பாட்லாக் எதற்கு? அரையணுவில் கிடைக்கிற பாட்லாக்கைக் கூடவும் என்னிடமிருந்து வாங்கிவிட வேண்டுமென்று பார்க்கிறுயே. உன்னை என் மகளுக்குத்தானே கட்டிக் கொடுத்திருக்கிறுர் உன் அப்பா. அவரிடமிருந்து மங்களம் கேட்பதெல்லாம் ஏன் வாங்கிக் கொடுக்கக்கூடாது?

என்று எச்சரிக்கும்
மாமா கோதண்டராமன்.

---

## ருஷ்யாவில் காட்சிச்சாலை அபிவிருத்தி

சோவித் ருஷ்யாவில் ஒரு வருடத்தில் ஒரு கோடி 50 லட்சம் பேர் பற்பல காட்சிச் சாலைகளையும் சென்று பார்வை யிடுகின்றனரென்று சர்க்கார் அறிக்கை யொன்றினல் தெரிகிறது.






விஞ்ஞானப் பண்டிதர் :—நான், இரும்பைவிடக் கடினமானதும், கறுப்பு நிறமானதும், தரையில் போட்டால் ரப்பர்போல் எழும்புவதுமான ஒரு உலோகத்தைச் செய்திருக்கிறேன்.

நண்பர் :—என் மனைவி தோசை சுடத் தொடங்கிய நாள் முதல் தினசரி இதனைச் செய்து வருகின்றுளே.

* * *

போலீசதிகாரி :—15 நாளாக உன் மனைவியைக் காணவில்லையானல் உடன் வந்து ரிப்போர்ட் செய்வதற்கென்ன?

குடியானவன் :—பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளிலெல்லாம் எவனவது வெளிப்பட்டிருக்கிறுன என்று பார்ப்பதில் 14 நாளைச் செலவிட்டு விட்டேன்.

போலீசதிகாரி :—ஏன் அங்கு போய்ப் பார்த்தாய்?

குடியானவன் :—அவளைக் கூட்டிப் போனவன் யாரென்று தெரிய.

* * *



மாஜிஸ்திரேட் :—உன் மனைவியைத் தொல்லைப் படுத்தினுயா?

குற்றவாளி :—இல்லை.

மாஜிஸ்திரேட் :—நல்லது; விளக்குமாற்றினல் உன் மனைவியை அடிக்கவில்லையா?

குற்றவாளி :—அடித்தேன்.

மாஜிஸ்திரேட் :—இரண்டாவது, அவள் மீது காறியுமிழவில்லையா?

குற்றவாளி :—உமிழ்ந்தேன்.

மாஜிஸ்திரேட் :—வையவில்லையா?

குற்றவாளி :—வைதேன்.

மாஜிஸ்திரேட் :—பின், ஏன் அவளைத் தொல்லைப்படுத்தவில்லை யென்றுய்?

குற்றவாளி :—அவைகள் தொல்லைப் படுத்தவேண்டுமென்ற நோக்கத்தோடு செய்யவில்லை. அடுத்த வீட்டு அபிராமனேடு சிநேகம் வைத்திருந்ததற்குப் பரிசுதான் கொடுத்தேன்.

* * *



சங்கர் :—(மனைவியைப் பார்த்து) இந்தப் படத்திலுள்ள அம்மா நடக்கிறுளா? 'டான்ஸ்' ஆடுகிறுளா?

மனைவி பத்மா :—அந்த ஐயா பத்திரிகை படிக்கிறுரா, அம்மாவைப் பார்க்கிறுரா?

ஆஸ்பத்திரிச் சேவகன் :—உங்கள் மனைவி உங்களைப் பார்க்க வரலாமாம். ஆனல் பேசக்கூடாதாம்.

நோயாளி :—அப்படிச் சொல்லும் டாக்டரிடம்தான் எப்போதும் இருக்க விரும்புகிறேன். அவர் நீடூழி வாழ்க!

* * *



ஒரு சிறு கிராமத்திற்குச் செல்ல வேண்டிய ஓர் பெண் ரயில்வே ஸ்டேஷனில், பக்கத்தில் நின்ற ஒருவரைப் பார்த்து :—பிள்ளையார்பட்டி போவதற்கு எந்த விடத்திற்கு ஐயா டிக்கட் வாங்கவேண்டும்?

அம்மனிதன் :—முதலில் எங்கள் வீட்டுக்கு டிக்கட் வாங்கம்மா.

---

### இனிய திருமணம்

ஸ்ரீ பாலூர் சீனி முதலியார் மகளான மதுர மென்பவளுக்கும் முல்லைவனம் பங்கஜத்தின் மகள் செண்பகத்திற்கும் மூன்றுவது முறையாகச் சென்ற மாதம் மணம் நடைபெற்றதாம். இதனை இனிய, திரு, மணமென்று சொல்வதில் தடையென்ன?

---

யுத்தம் என்பது ஒருவித வெறி; யுத்த மென்பது நாகம்; யுத்த மென்பது கொடுமை; யுத்த மென்பது மனிதகுலத்தினிடம் காண்பிக்கும் சொல்லமுடியாத துரோகம்.

—டாக்டர் பி. டி. தாம்ப்சன்,

* * *

பர்மா வருடா வருடம் எட்டுலட்சம் டன் அரிசியை இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்துகொண்டு வந்திருக்கிறது.

* * *

புத்தர் பிறந்து இவ்வருடத்தோடு 2478 ஆண்டுகளாகின்றன.

# பிரபஞ்ச ரகசியம்.

நமது முன்னோர்கள் கிரகங்களைப் பற்றியும் நட்சத்திரங்களைப் பற்றியும் கொண்டிருந்த கருத்து முழுதும் தவறு என்பதை நாளடைவில் கண்டு வருகிறோம். மேனாட்டார், வானமண்டலத்தின் உண்மையை அறிய மிக மிகப் பாடுபட்டுவருகின்றனர். சென்ற 25 வருடங்களாகப் பல இரகசியங்கள் கண்டு பிடிக்கப்பட்டு விட்டன. அம் முயற்சியில் ஈடுபட்டு அதிகம் பெயர் பெற்றவர்கள் ஸ்ரீ. கெப்டன், வான் ரிஜின், ஷாப்லி, ஹூபில் ஸவர்ட் முதலியவர்களாம். இப்பண்டிதர்கள் கூறுவது சாதாரணமான மனிதர்கட்கே உண்மையாய்த் தோற்றுவதோடு பல்வேறு நவீன பண்டிதர்களாலும் போற்றவும் படுகின்றது. ஆதலால் நாம் அவர்கள் ஆராய்ச்சியை நன்கு நம்பலாம். அப் பண்டிதர்கள் பொதுப் படையாகக் கூறுவதாவது:—

"பூமியென்பது நுண்ணிய வோர் கிரகம். அது மிகச் சிறிய ஒரு நக்ஷத்திரத்தைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. அந்த நக்ஷத்திரத்தைத்தான் நாம் ஸூரியன் என்று வழங்குகிறோம். அது நமக்குச் சமீபத்திலிருப்பதால் நம் வாழ்க்கைக்கும் பந்த முடையதாக நினைக்கப்படுகிறது. இந்தச் சூரியனும் அதனை நெருங்கியிருக்கும் ஆயிரக்கணக்கான நக்ஷத்திரங்களும் சேர்ந்து "லோக்கல் கிளஸ்டர்" என்ற பெயர் பெறுகின்றன. அந்த நக்ஷத்திரக் கூட்டத்தின் (கிளஸ்டரின்) குறுக்களவு 8 ஆயிரம் ஒளி வருடங்கள். இந்த லோக்கல் கிளஸ்டரையும் வேறுபல நக்ஷத்திரங்களையும் சேர்த்து "ஸ்டெல்லார்" அமைப்பு என்று அழைக்கின்றார்கள். இதனை காலக்டிக் அமைப்பு அல்லது காலக்ஸி என்றும் சொல்வதுண்டு. காலக்ஸியில் அடங்கியிருக்கும் நக்ஷத்திரங்களின் தொகை 3 ஆயிரம் கோடி என்று பண்டித ரிஜின் சொல்கிறார். இந்தக் (பிரஸ்தாப) காலக்ஸியின் கெட்டி 10 ஆயிரம் ஒளி வருடங்கள் ஆகும். குறுக்களவு 150 ஆயிரம் வருடங்கள்.

சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் இந்தக் காலக்ஸிதான் பிரபஞ்சம் என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் நவீன ஆராய்ச்சியால் இது போன்ற காலக்ஸிகள் எத்தனையோ விருக்கின்றன வென்று தெரிகிறது.

வான சாஸ்திரிகள் நீண்ட காலமாக "ஸ்பைரல் நெபுலெ" (சுருள் கம்பிபோல் தோற்றும் நக்ஷத்திர வொளி) என்கின்ற ஒன்றைப் பற்றிக் கூறி வந்தார்கள். சில வான சாஸ்திரிகள் தூரதர்சினி மூலம் புகைப்பட மெடுத்தபோது இந்த நெபுலெ எல்லைபற்ற மங்கிய ஒளியாகவும் பிற்புறம் இடை யிடையே இருண்ட வெளியுடையதாகவும் தோற்றிற்று. ஆகவே நெபுலெ என்றால் என்னவென்பது பற்றிப் பல வருடங்களாகப் பெரியவர்கள் பலர் வாதம் நடத்தினார்கள். அநேக வான சாஸ்திரிகள் அது ஒரு விதமான ஒளித்திரள் என்றனர். ஆனால் 10 வருடங்கட்கு முன்பு நேபுலெயில் பிரகாச மிகுந்திருப்பதும் பிறவும் ஒளித்திரளல்ல வென்று நிரூபிக்கப்பட்டது. டாக்டர் ஹூபில் என்பார் மௌண்ட் வில்சன் வான்—ஆராய்ச்சிச் சாலையிலிருக்கும் தூரதர்சினி மூலமாகப் பரிசோதித்து நக்ஷத்திரங்களோடு சேர்த்து வழங்கப்பெறும் ஆண்ட்ரோமீடா என்ற நெபுலெ ஒரு நக்ஷத்திரமே யென்றும் அதன் தூரம் 95000 ஒளி வருடங்களென்றும் நிரூபித்தார்.

சுருக்கத்தில் நெபுலெ என்பவைகள் எல்லாம் காலக்ஸிகளாகும். அவற்றில் நமது சூரியன்தான் மிகச்சிறிய கோளம்; அன்றி முக்கிய மல்லாதது மாகும்.

டாக்டர் டி சிட்டர் என்பவர் "ரிலேட்டிவிடி" என்ற தத்துவத்தால் வானமண்டலத்தில் 800 கோடி காலக்ஸிகளிருக்கின்றன வென்றார். டாக்டர் ஹூபில் சில வருடங்கட்கு முன்பு 20 லட்சம் காலக்ஸிகள் 100 அங்குல தூரதர்சினியில் தெரிவனவாயிருக்கின்றன வென்றார். டாக்டர் ஷாப்லி நக்ஷத்திர உலகத்தை நன்றாகப்படித்து நெபுலெயிலுள்ள பல நக்ஷத்திரங்கள் 15 கோடி ஒளி வருடத் தூரத்திலிருக்கின்றன வென்றார். இங்ஙனம் ஆராய்ச்சி பல விதமாயிருக்க டாக்டர் ஹூபில் என்பவர் நம் முன் சில தத்துவங்களை எடுத்து விரித்துக் கூறுகிறார். அவர், கண்ணுக்குத் தெரிந்த வரையில் காலக்ஸிகள் எவ்வாறு பரப்பப்பட்டிருக்கின்றன வென்று தெரிவிக்க முதல் முதல் முயல்கின்றார். அதன் பொருட்டு, மௌண்ட் வில்சனிலிருக்கும் 100 அங்குலக் கண்ணாடி 60 அங்குலக் கண்ணாடி ஆகிய இரண்டின் வழியாகவும் 1283 பிளேட் (படங்களை) எடுத்தார். அவற்றில் 44 ஆயிரம் நெபுலேக்கள் தோன்றின. அவற்றில் ஒன்றாவது பால் வெளி (மில்கிவே)யின் எல்லைக்குள்ளாக அமையவில்லை. ஆகவே இந்தக் காலக்ஸிகளெல்லாம் நமது காலக்ஸியை விட்டு எவ்வளவோ நீங்கியிருப்பவைகள் என்று நினைக்கலாம்.

காலக்ஸிகளில் பல, பால் வெளிப்பிரதேசத்தை நெருங்கும் போது கண்ணுக்கு மறைந்து போகின்றன. அதன் காரணம் பால் வெளியில் புதைந்திருக்கும் கணக்கற்ற நக்ஷத்திரங்களில் பிரகாசமும், பார்வையை மறைக்கும் பிற பொருட்களுமாம்.

டாக்டர் ஹூபில் அப்பால் எழுதும் போது, ஸ்டெல்லார் சிஸ்டத்திற்குப் புறம்பான எந்த விசேஷ நக்ஷத்திர அமைப்பும் இருப்பதாகச் சொல்வதற்கில்லை என்கின்றார். அதாவது ஒவ்வொரு காலக்ஸியும் தனித்தனியாக இயங்குகின்றனவே யன்றி வேறொரு பெரிய சக்தியைச் சம்பந்தப் பட்டோ அதனை சுற்றிக் கொண்டோ இருக்கவில்லையாம்.

டாக்டர் ஷாப்லி, நமது காலக்ஸியை கோம செண்டாரஸ் என்ற காலக்ஸிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மிகவும் சிறியதாயிருக்குமென்று சில வருடங்கட்கு முன்னர் கூறினார். ஆனால் பண்டித ஸ்டெபின்ஸ், கனம் விட்போர்டு ஆகியவர்கள் ஆண்ட்ரோ மீடா என்ற காலெக்ஸியை ஆராய்ச்சி செய்து விட்டு அது முன் சொன்னவற்றை விட மிக மிகப் பெரிது என்கின்றார்கள்.

---

காலிபோர்ணியாவில் (அமெரிக்க) மௌண்டு வில்சன் என்ற விடத்தில் உலகில் பெரிய நக்ஷத்திரக் காட்சிச் சாலை ஒன்றிருக்கிறது.

* * *

நயாக்ரா நீர்வீழ்ச்சியிலிருந்து 50 லட்சம் குதிரை வேகமுள்ள மின்சாரம் உற்பத்திசெய்யலாம். அந்நீர் வீழ்ச்சி தொண்ணூறு மைல் உயரத்திலிருந்து வருகிறது.



# எனது தபாற் பெட்டி

(பகிரதன்)

பண்டித மாளவ்யா,
தலைவர்,
கா. பார்லிமெண்டரி போர்டு,
ஸ்ரீ காசி.

பண்டித பாபுஜீ,

தங்கள் பெருமை, படிப்பு, தபாளம், தேசபக்தி யெல்லா மொருபுறமிருக்க, தங்கள் மனச் சஞ்சலத்தின் அளவு மிகவும் பெருத்துப்போய் விட்டது.

பம்பாயில் வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாகக் காங்கிரஸ் செய்துள்ள தீர்ப்புத் தங்கட்குப் பிடிக்கவில்லை. ஆதலால் தங்கள் பதவியைப் பார்லிமெண்டரிபோர்டிலிருந்து ராஜிநாமா செய்துவிடப் பார்த்தீர்கள். அப்போது காந்திஜீயின் தர்சனம் கிடைத்ததும் கண்ணீர் பெருகத் தங்கள் முடிவை மாற்றிக்கொண்டீர்கள். பிறகு டாக்டர் மூஞ்ஜே, பாய் பாமானந்தர் ஆகியோர் ஹிந்து மதத்திலுள்ள பெருமையை எடுத்துச் சொல்ல முயன்றதும், மீண்டும் ராஜிநாமாக் காகிதத்தைக் கையிலெடுத்தீர்கள். அப்போது ஸ்ரீ. ராஜகோபாலாச்சாரியார் தோன்றினார். மீண்டும் உங்கள் தீர்மானம் மாறுபட்டது. அப்பால் ஸ்ரீ. ஜயகர் தோன்றி முஸ்லிம்கட்கு உரிமை கிடைக்கும் போது இந்துக்கள் சும்மாவிருக்கலாமா வென்றாராம்; உடன் நீங்கள் பழைய காகிதத்தை எடுத்து ராஜிநாமா எழுதத் தொடங்கி யிருக்கிறீர்களாம்.

இவ்வாறு அடிக்கடி முரண்பட்ட அபிப்பிராயத்தை நினைப்பது தங்களைப் போன்ற தலைவருக்கு அழகல்ல. ஏதோ சிலர் சிலர் சொல்வதற்குத் தகுந்தபடி ஆடுவதென்றால் திண்மை எங்கிருக்கிறது? தயவுசெய்து ஓயாது இந்து—முஸ்லிம் என்ற பேத வுணர்ச்சியையும் போட்டிக் கருத்தையும் மனதில் வைத்துக் கொள்ளாதீர்கள்—உண்மையான தேசாபிமானிகள் வகுப்பு வாதமே பேச மாட்டார்கள். இவ்வுண்மை தங்கட்குத் தெரியாததல்ல; ஆனால் மதமென்ற மயக்க ஆசை தங்களைப் பிடித்து ஆட்டுகிறது. ஆகவே ராஜீய வாதியாக விருந்தால் முதத்தைப் பெரிதாக நினையாது நாட்டு விடுதலைக்காக முற்படுங்கள். முஸ்லிம் சகோதரர்கள் எல்லோரும் வகுப்புத் தீர்ப்பை நலமென்று நினைக்கவில்லை. மாறுபட்ட கருத்துடையோர் சீக்கிரத்தில் நம்மோடு சேர்ந்து விடுவார்கள். ஆதலால் தங்கள் போர்டுப் பதவியை விட்டுவிடாது திண்மையுடனிருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தேசீய வாதியான,
பகிரதன்.

---

மில் முதலாளிகள்,
பம்பாய்.

அன்புடையீர்,

நீங்கள் எல்லோரும் இந்தியாவிலுள்ள பணக்காரர்களென்பதையும், ஏழைகள் ஆயிரக்கணக்கானவர் தினந்தினம் சுமார் 8 மணி நேரமுழைக்க அதனால் கிடைப்பதைப் பெற்றுக் கொழுத்து வருகின்றீர்களென்பதையும் நன்கறிவேன். அஃதோடு உங்கட்குள் சங்கமொன்றை நிறுவி அதன் மூலம் சில உரிமைகளையும் பெற்று வருகின்றீர்களென்பதும் தெரியும். காங்கிரஸ் மில் துணிகளையும் தேச மக்கள் கட்டலாம் என்று தீர்மானித்ததற்கு உங்கள் வேலைகள் ஒரு பகுதி காரணமென்பதாகக் கேள்வி—நிற்க.

நீங்கள் தொழிலாளிகட்கு (ஒரு மில்லுக்கு மற்றொரு மில் சம்பந்தமில்லாதபடி) சம்பளத்தை தத்தமக்குத் தோற்றியவாறு மிகவும் குறைத்து விட்டீர்களென்றும் அதுபற்றித் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்களென்றும் பத்திரிகையில் செய்தி வந்தது. ஒருவர் உழைத்துச் சம்பாதிப்பதை வேறொருவர் சாப்பிடுவது தகுதியல்லவென்ற உணர்ச்சி தொழிலாளிகளிடமெல்லாம் பரந்து வருகின்ற இது போழ்து, நீங்கள் சம்பளத்தையே குறைப்பதென்றால் எவ்வளவு பெரிய தவறு? மேலும் நீங்கள் சங்கம்கூடி உங்கள் காரியங்களிலெல்லாம் கண்ணுங் கருத்துமா யிருக்கின்றீர்களே; அதே போல சம்பளங்களைக் குறைப்பதிலும் எல்லா முதலாளிகட்குள்ளும் ஒரு சமத்துவம் வேண்டாமா? அப்படியில்லாது ஓரிடத்தில் அரையும் மற்றோரிடத்தில் காலும் பிறிதோரிடத்தில் அரைக்காலும் குறைப்ப தென்றால் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? ஆகவே சர்க்கார் நியமித்த ஒரு விசாரணைக் கமிட்டி இந்த அபிப்பிராயத்தைத் தெரிவித்து அறிக்கை விட்டதென்றும் கடைசியில் நீங்கள் ஒரு நேர்மையான முடிவுக்கு வந்தீர்களென்றும் செய்தி கிடைக்கிறது. நல்ல வேளை, இத்தனை நாள் தொழிலாளிகள் வேலையின்றிக் கஷ்டப்பட்டதுடனாவது நிறுத்திவிட்டீர்களே! இனி மேல் உழைப்பவர் வயிற்றை வாட விடுவது தர்மமென்று கருதாதீர்கள்.

அன்புள்ள,
பகிரதன்.

---

மகாத்மா காந்தி,
இந்தியா.

அன்புள்ள பாபுஜீ,

வணக்கம். பூனாவில் தங்கள்மீது வெடிக்குண்டு போட முயன்றவனைப் பிடித்துக் கொடுப்பவருக்கு 1000 ரூபாய் பரிசளிப்பதாக சர்க்கார் சுற்றுத் தாவனுப்பி யிருக்கிறார்கள். நீங்கள் அக் "குற்றவாளியைக் கண்டால் மன்னித்து விட்டு விடுவேன்" என்று கூறுகிறீர்கள். இவை எவ்வளவு முரண்பட்ட விஷயங்கள்! நீங்கள் குற்றவாளியை மன்னித்து விடுவது மட்டிலும் போதாது. அவனுக்கு நீங்கள் குறைந்த பக்ஷம் 1000 ரூபாயாவது பரிசளிக்கவேண்டும். ஏனெனில் அவன் உலகத்திற்கு ஓர் பெரிய உண்மையைக் காண்பித்திருக்கிறான். சென்ற சத்தியாக்கிரகத்தின் பின்னர் காந்திஜீயின் செல்வாக்கு இந்தியாவில் குறைந்து விட்டதென்றும், அவர்மீது பொது ஜனங்கட்கு அன்பில்லை யென்றும் சிற்சிலர் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் கூறி வந்தார்கள். திரு. ஹோர் கூடவும் அப்படிச் சொன்னதாகக் கேள்வி. இன்று வெடிக்குண்டுக் குற்றவாளி செய்த செய்கையால் தேசம் தங்கள்

மீது எவ்வளவு பக்தி பூண்டிருக்கின்ற தென்பது வெளிப்பட்டு விட்டது. எத்தனையோ நகர சபைகள், யூனியன்கள், பொதுக்கூட்டங்கள், சட்ட சபைகள், சங்கங்கள் எல்லாம் குண்டெறிந்தவனைக் கண்டித்ததோடு, என்னிறந்த தலைவர்களும் சனாதனிகளுங்கூட பூனா சம்பவத்தை யொட்டித் தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். அன்றியும் இம்மாதம் 15-ந் தேதியில் இந்தியாவிலுள்ள சந்து பொந்துகளிலெல்லாம் நீங்கள் உயிர் தப்பியதற்காகத் தம் சந்தோஷத்தைப் பொதுக்கூட்டம் மூலம் தெரிவிக்கப் போகிறார்கள். இவ்வளவு தூரம் தங்கள் செல்வாக்கு நாட்டில் மறைந்து படவில்லை என்று காண்பித்த பூனா வெடிக்குண்டு வீரனை சும்மா விட்டுவிடுவதா? அவன் செய்த காரியத்தினால் சனாதன இயக்கத்திற்கே அழிவு ஏற்பட்டு விடவில்லையா? அன்றி மறைமுகமாகக்காங்கிரஸ் முயன்றுவரும் எலக்ஷன் வெற்றிக்கு உதவியாக விராதா? இத்துடன் ஹோர்போன்றவர்கள், சர்ச்சில் கூட்டத்தார், கல்கத்தா ஐரோப்பிய சங்கத்தார் ஆகியோர்களும் தங்களின் செல்வாக்கின் அழியாத் தன்மையை உணர்ந்து கொண்டிருக்க மாட்டார்களா? ஆகவே இந்த நெருக்கடியான சமயத்தில் தங்கள் பிரகாசத்தைத் தூண்டிவிட்ட வீரனுக்குப் பரிசுகொடுப்பதே தகுதி. கடைசியாக, அவன் செய்கைக் கப்புறம் நீங்கள் சென்ற விடங்களிலெல்லாம் தங்களைப் பார்க்க வரும் ஜனங்களின் தொகைதான் எத்தனை? ஆகவே குற்றவாளியை மன்னித்து விட்டால் மட்டிலும் போதாது. தகுந்தபடிப் பரிசளிக்கவும்.

பக்தி செலுத்தும்,
பகீரதன்.



மைலாப்பூர் 'ஹெர்மிடேஜ்' ஸ்டுடியோவில் பிராட்காஸ்ட் ரிக்கார்டில் ஸ்ரீ தேசாய் தேசத்திற்கு நற்செய்தி என்று சில பேசினர். படத்தில் மைக்ரோபோனில் அவர் பேசுவது தெரிகிறது. அதிசீக்கிரத்தில் சங்கீத வெளியீட்டுக் கம்பெனியார் சென்னையிலும் பம்பாயிலும் அதனை வெளியிடுவார்கள். —P. P. B.

---

சர். தேஜ் பகதூர் சாப்ரூ,

ஐயா,

தாங்கள் வட்டமேஜை மகாநாடு, சர்க்கார்—காங்கிரஸ் சமரசம் போன்ற விஷயங்களில் ஈடுபட்டு வேலை செய்திருந்தாலும், பெரிய லாயருந் தேர்ந்த அரசியல் ஞானியுமாக விருந்தாலும், பொதுஜனங்களி னிடையே அவ்வளவாக மதிப்பில்லை என்பதைக் கூறாமலிருக்க முடியாது. சமீபத்தில் லார்டு வெல்லிங்டன் தங்கட்கு எதாவது ஒரு மாகாணத்தில் கவர்னர் பதவி தந்துவிட வேண்டுமென்று சிபார்சு செய்ததாகச் செய்தி வெளிவந்தது. அதனைக் கண்டும் ஜனங்கள் சந்தோஷப்பட்டு விடவில்லை. ஆனால் சமீபத்தில் ஹரிஜனங்கட்குதவும் பொருட்டு ஓர் ஆஸ்பத்திரி கட்ட ரூபாய் 6000 மும் காந்திஜீயின் ஹரிஜன நிதிக்கு ரூபாய் 1000 மும் கொடுத்தீர்களென்று கேள்விப்பட்டதும் எல்லோரும் மகிழ்ந்து விட்டார்கள். இதுகாறும் நீங்கள் ஹரிஜனங்கள் மீது இவ்வளவு சிநேகம் காண்பிப்பீர்களென்று ஒருவரும் நினைக்கவில்லை. வணக்கம் தங்கட்கு.

ஹரிஜன ஊழியன்,
பகீரதன்.

## காந்திஜி ஒரு வாரம் உண்ணா விரதம்

---

காசி, ஜூலை, 10

சனாதனத் தலைவர் பண்டித லால்நாத் என்பவர் அஜ்மீரில் தாக்கப்பட்டு காயமடைந்ததற்குப் பிராயச்சித்தமாக மகாத்மா காந்தி, ஆகஸ்டு மாதம் 7ந் தேதி செவ்வாய்க்கிழமை முதல் வார்தாவில் ஒரு வாரம் உண்ணா விரதமிருக்கிறதென நிச்சயித்து விட்டார்.



# உலகப் போக்கு

---

காயிர்ப்பூர் நவாப்

என்பவர் வட இந்தியாவில் ஒரு பகுதியை ஆண்டு வருபவர். இந்து சாஸ்திரம் கூறுகிற பாதிரி அவதாரங்களெல்லாம் மகா விஷ்ணுவின் அவதாரங்கள் என்பது உண்மையானால், இவரும் விஷ்ணுவாகவே தான் இருக்க வேண்டும். ஆனால் மகாவிஷ்ணு முஸ்லிமாகப் பிறப்பாரா வென்பது பெரிய சந்தேகம். ஆனால் கடவுள் சித்தம் எப்படியோ. சரி, இந்த நவாபின் மகாத்மியம் மிக்க திருமூளையில் ஒரு ஆச்சரியமான யுக்தி முளைத்து வெளியே வந்திருக்கிறது. அதன் மூலம் அவர் எந்த ஹிந்துக்களும் மகமதியரின் நிலபுலன்களை வாங்கக் கூடாதென்றும் வாங்கினால் அது செல்லுபடியாகாதென்றும் சட்டம் செய்திருக்கிறார். இச்சட்டத்தின் கனம் எவ்வளவிருந்தாலும் சரி, நவாப் அவர்களின் உத்தேசம் முஸ்லிம்களைக் கஷ்டப்படுத்த வேண்டுமென்பதோ அல்லது இந்துக்களுரிமையைப் பறி முதல் செய்ய வேண்டுமென்பதோ எதுவானாலும் சரி, இந் நவீனச் சட்டத்தால் இரு மதத்தினரும் தத்தளிக்கின்றார்கள். கொஞ்ச நாள் போனால் முஸ்லிம்கள் நிலத்தை நவாபு தான் வாங்க வேண்டி வரும்; அல்லது அவர் முஸ்லிம் பணக்காரர்களை ஏராளமாகப் படைக்க வேண்டி வரும்.

கல்கத்தாவிலுள்ள

ஏ. எச். டார்னர் என்ற ஜோசியப் புலி காந்திஜீயின் ஜாதகக் குறிப்பைப் பார்த்ததாம். அதன் பயனாக, ராகு வென்பவன் காந்திஜீயின் ஏதோ ஒரு வீட்டிலிருப்பதாகவும் ஆகையினாலேயே பலவிதக் கஷ்டங்கள் ஏற்படுகின்றன வென்றும், ஆகஸ்ட் 9-ந் தேதி சனி யென்ற துஷ்டன் மகரத்திற்குப் போகப் போகின்றானென்றும், இப்போது பெரும்பாலும் மூட்டையைக் கட்டத் தொடங்கி விட்டானென்றும், ஆதலால் கஷ்டம் ஜாஸ்தியாகின்ற தென்றும், செப்டம்பர் மாதம் 2-ந் தேதியாகிய சுபதினத்தன்று குருவென்பவர் துலாத்தில் குடியிருக்க நிச்சயித்துள்ளா ரென்றும், இப்படிச் சிலர் இடம்விட்டு இடம் மாறிக் குடியேறுவதால் காந்திஜீக்குத் தொல்லை யதிகப்படுகின்ற தென்றும் கண்டு பிடித்தார். அதோடு நவம்பர் 6-ந் தேதியும் 7-ந் தேதியும் காந்திஜீயைப் பலர் நன்றாகக் காத்துக்கொள்ள வேண்டுமென்றும் கண்டு கொண்டார். இந்த மகானுபாவர் செய்த அரிய ஆராய்ச்சிக்காக நீடூழிவாழ்க! பின்னடி வருவதை முன்னடியே கூறிவிட்டதால் நாம் எச்சரிக்கையா யிருக்கலாமல்லவா! இப்பெரியவர் "காந்திஜீயின் கிரகங்கள் ஒழுங்கு கெட்டிருப்பதினாலும் அடிக்கடி வீடுமாறுவதினாலுமே அவர் ராஜத்துரோகமான காரியங்களைச் செய்கிறார்; ஆகவே, அவரைக் குற்றவாளியாக்குவதில் பயனில்லை" யென்று சர்க்காருக் கெழுதி விட்டாரானால் மிகுந்த உதவியாக விருக்கும்! அப்படிச் செய்வதற்கு முன்பு "ஜோசியாவாள்" வெளியே வந்து பொது ஜனங்களிடமும் "கிரகம் பிடித்தாட்டுகின்றது காந்தியை. ஆகவே, அவருடன் யாரும் சேராதீர்கள்" என்று பிரசங்கம் செய்தாரானால் பிரயோசனமாயிருக்கும்; மக்களும் துன்பமற்று வாழ்வார்கள். அப்படி ஏன் செய்யாதிருக்கின்றார் இப்பெரியார்? இனி அவர் நம் பாரதநாட்டின் மீது கருணை கூர்ந்து எத்தனை வருடங்களவரை அந்நியர் ஆளுகைக்குள் ளிருக்குமென்றும் சொல்வாரா? காந்திஜீயின் ஜாதகமெனப்படும் குறிப்பு இவருக்கு எங்கிருந்து கிடைத்துவிட்டதோ? காந்திஜீயின் பந்துக்கள் பாபுவுக்கு ஜாதகமே இல்லையென்று முன்னொரு தரம் பத்திரிகைகளில் எழுதிவிட்டார்கள். அப்படியிருக்க இந்தக் கல்கத்தாப் புலி செய்த அற்புதம் ஆச்சரியந்தான்!

அமெரிக்காவில்

டாக்டர் சேமூர் என்ற பெயரோடு ஓர் பிரமா பிறந்திருக்கிறார். இவர் தொழிலால் சத்திய லோகப் பிரமாவைப் போன்றவர்தான். ஆனால் தொழில் செய்யும் மாதிரியில் மட்டிலும் கொஞ்சம் வித்தியாசம் காண்பிக்கிறார். தேவலோகப் பிரமா சங்கற்பத்தால் எல்லாவற்றையும் படைத்துவிடுவார் என்று சொல்லப்படுகிறது. சேமூர் என்பவர் கண்ணாடிக் குழாய்கள் மூலம் படைப்புத் தொழிலை நடாத்துகின்றாராம். சமீபத்தில் அமெரிக்காவில் குழந்தையில்லாது போன சில பெண்கட்கும் புருஷ சேர்க்கையே விரும்பாத சில பெண்கட்கும் கருப்பத்தை உற்பத்தி செய்து விட்டாராம். அதில் ஒரு பணக்காரப் பெண்ணுக்கு—கொஞ்சம் தாராளமாக



பூனா ஹிராபாக்கில் ஸ்ரீமதி சரோஜினி தேவியின் தலைமையில் ஒரு பெண்கள் கூட்டம் நடத்தப்பட்டது. —S. P. B.

சக்தியைப் பிரயோகித்து விட்டார் போலிருக்கிறது—இரட்டைக் குழந்தையே பிறந்துவிட்டது. இந்தப் பிரம வித்தையை எப்படி சேமூர் செய்கின்ருர் என்று வினவியபோது, அவர் அவ்வளவாகப் பதில் கூறவில்லை; ஆனாலும் ஏதோ புருஷர்களினுடம்பிலிருந்து சத்தை யெடுத்து அதனைக் கண்ணுடிக் குழாய் மூலம் பிள்ளை வரம் கேட்கும் பெண்கட்கு, உணர்ச்சியை எழுப்பி, உடம்புக்குள் ஏற்றி விடுகிருர் என்று கூறினர். இவ்வாறு இப் பிரம்மா செய்யத் தொடங்கி விட்டதால் தந்தையை யறியாத "சின்னஞ் சிறுவர்" ஏராளமாகப் பிறக்கின்றனராம். புருஷனில்லாது பெண்கள் தனிமையாகப் பிள்ளை பெறுவதென்ருல் அவர்கள் நிமிரைப் பற்றி என்ன சொல்வதென்று தெரியவில்லை. இந்தியாவுக்கு—டாக்டர் சேமூர் வருவதானால் எத்தனை விதவைகள் அவர் பெயரைச் சொல்லிப் பிழைப்பார்கள்!

### தங்களைப் பெற்றெடுத்த

தாய் தந்தையர் கல்யாணத்தைக் கண்ணாரப் பார்த்தார்களாம் லாஸ் ஏஞ்செல்ஸ் நகரத்திலுள்ள இரு சகோதர சகோதரிகள்! சாமுவெல் பிரீட்லவ் என்பவரும் எம்மா பிரீட்லவ் ஷாங்ஸ் என்பவரும் கல்யாணம் செய்து கொண்டு ஒரு ஆண் குழந்தையையும் ஒரு பெண் குழந்தையையும் பெற்ருர்கள். கொஞ்ச நாள் இருவரும் பழகி வந்ததில் புளிப்பேறி விட்டதாம். எனவே இருவரும் கலந்து பேசி விவாகத்தை அறுத்துக் கொண்டார்கள். அதற்கப்பால் இருவரும் நெருங்கவே இல்லை. குழந்தைகள் கிரமப்படி வளர்ந்தார்கள். ஆனல் சாமுவெல்லுக்கு வயது எழுபத்துநாலும் எம்மாவுக்கு வயது எழுபத்து ஒன்றும் ஆன சமயத்தில் "கிழவா பழைய ஆவல்" என்ற மாதிரியில் மன்மதன் முன் வந்து இருவரைப் பார்த்துத் தன் பாணங்களை வீசினனும். ஆதலால் பாணத்தின் காரம் பொறுக்க முடியாமல் வாலிபரிருவரும் மீண்டும் மணம் செய்து கொண்டார்கள். இந்தத் திருமண வைபவத்தில் முதலாவது தாம்பூலம் வாங்கியவர்கள் அவர்களுடைய புதல்வியும் புதல்வனுமாம்.

### லிவர்பூலில்

மாட்பெட்டி என்ற ஒரு பெண்ணை மூன்று குழந்தைகளோடு விட்டுவிட்டு டாம்பர்லின் என்ற ஒருவர், 3 வருட வேலையாக ஒரு சீனக் கப்பலில் போய் விட்டார். அதனைத் தெரிந்துகொண்ட பெட்—ஏன் வீண் பொழுது போக்க வேண்டுமென்று நினைத்தாள் போலிருக்கிறது—குழந்தைகள் மூன்றையும் தன் தந்தை வீட்டில் விட்டுவிட்டு, மணமாகாத பெண்ணைப்போல் பாசாங்குசெய்து எல்லிஸ் என்ற வாலிபரை மயக்கித் தன் குழியில் வீழ்த்தினள். அவர் கண்ணிருண்டு எளிதில் விவாகத்திற்குச் சம்மதித்து அதுவும் முடிந்து விட்டது. ஆனல் மூன்று நாட்களுக் கொருமுறை பெட்டி தாய் வீடு சென்று திரும்பி வந்து கொண்டிருந்ததன் கருத்து எல்லிசுக்குத் தெரியவில்லை. கடைசியில் கப்பலில் போனவர் வந்ததும், எல்லிஸ், தம் காதலி குழந்தைகள் மூவரையும் பார்க்கத்தான் தாய் வீட்டுக்குப் போய் வந்தாளென்பதைக் கண்டு கொண்டான். இப்போது எல்லிஸ் ஒரு பக்கமும் டாம்பர்லின் ஒரு பக்கமுமாகக் கோர்ட்டில் நின்று பெட்டியைப் பார்க்கிருர்கள். குழந்தைகள் தங்கட்கு இரு தந்தையர் இருப்பதைப் பார்த்துக் குதூகலிக்கின்றனர்.

### திபத் தேசதில்

கடவுளோடு கடிதப் போக்கு வரத்துடையவர்கள் ஏராளமாக விருக்கிருர்கள். சமீபத்தில் ஒரு வாலிப பௌத்த சந்நியாசி (லாமா) அங்கு ஒரு தங்கச் சுரங்கத்தைக் கண்டு பிடித்தார். நன்ருக ஆராய்ச்சி செய்த போது கண்டு பிடிக்கப்பட்ட தங்கத்தின் அளவு ஜாஸ்தி என்று தெரிந்தது. எனவே சர்க்கார் சம்மதத்தைப் பெற்று சிலர் தங்கத்தை வெளியே எடுக்கமுயன்றனர். கொஞ்ச நாள் வெட்டி எடுத்ததும் ஒரு திபத்து ஆலயத்திற்குக் கடவுளிடமிருந்து தூது வந்து விட்டதாம். எனவே பூமாதேவியின் குடும்பச் சொத்தாகிய தங்கத்தை மனிதர்கள் எடுப்பது தவறு என்றும் உடன் வேலையை விட்டு விட வேண்டுமென்றும் உத்தரவு போட்டு விட்டார்கள். ஆலய அதிகாரிகள் திருவாய் மலர்ந்தருளினல் மனிதர்கள் மீறலாமா? எனவே வேலைக்கு உடன் முற்றுப் புள்ளி போடப்பட்டு விட்டது. ஆனல் கடவுள் தன்மை தெரியாத ஒரு ந்யூயார்க் வெள்ளைக்காரப் பத்திரிகை, "திபத்தில் அதிகம் தங்கமிருக்கின்றதென்பதை வெளி நாடு அறிந்து விட்டால் அவை சூழ்ச்சி செய்ய ஆரம்பித்து விடுமென்று கருதியே திபத் ஜனங்கள் அடக்கி விட்டார்கள்" என்கிறது. இது முழுதும் சரியாகி விடமாட்டாது. வாரா வாரம் லட்சக் கணக்கில், இருக்கும் தங்கத்தை யெல்லாம் கப்பலேற்றிக் கொண்டிருக்கும் இந்தியா தேசம் சூழ்ச்சி செய்யவா செய்யும்! ஒரு கால் தனது தொழிலைக் குறிப்பிடுகின்றது போலும் ந்யூயார்க் பத்திரிகை.

### ஜூலை 8-ந் தேதி

திரு. பொ. திருகூட சுந்தரம் அவர்கள் தூத்துக்குடியில், ஓர் கூட்டத்தில் கருத் தடை மிகவும் அவசியமென்றும் அநாவசியமாய்க் குழந்தைகளைப் பெறுவதால் தாய்மார்களின் உடம்பும் புத்தியும் கெட்டுப் போகு மென்றும், நாட்டில் வறுமை பெருகுமென்றும் இன்னோரன்ன பிறவும் எடுத்து உருக்கமாகக் கூறினராம். உடனே கூட்டத்திலிருந்த ஒருவர் திருகூடசுந்தரர் பேச்சினல் வெகுண்டு இறுக மீசையை முறுக்கிக்கொண்டு எழுந்தாராம். அவரது கை, கால், கண், தலையெல்லாம் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாது ஏதேதோ செய்ய, வாய் மட்டிலும் "பரம்பொருளின் உத்தேசத்துக்கு மாருக நடப்பது அடுக்குமா? கடவுள் கட்டளையை மீறலாமா" வென்றும் "குழந்தைகளை ஒழுங்காகப் பெற்றுக் கொண்டே பஞ்சத்தைத் தீர்க்கப் பாடுபட வேண்டு" மென்றும் பேசிக் கோபப்பட்டாராம். மொத்தத்தில் அவர் சண்டை போட்டதைப் பார்த்தால் கடவுள் தன்னிடம் வந்து கேட்டால் பதில் சொல்ல வேண்டுமே என்று நினைத்துப் பேசியதுபோ லிருந்ததாம். பாவம்! திருகூடசுந்தரனரின் பிரசாரம் கடவுள் ஆணைக்கு மறுப்பானதா யிருந்தால் எல்லாம் வல்ல அவ் வெம்பெருமான் சிந்துபூந்துறை சென்று அவரிடம் கேட்டுக் கொள்வானன்ருே? தூத்துக்குடி அன்பர் ஏன் கோபம் கொள்ளவேண்டும்? கூட்டத்தில் ஏன் கலாட்டா செய்யவேண்டும்? தனக்குக் குழந்தை வேண்டுமென்ருல் மும்மூன்ருகவோ நான்கு நான்காகவோ பெற்றுக் கொண்டு இந்தியா செழிப்படையப் பாடுபடலாமே—அதுகூட வேண்டாம்—குழந்தை பெறுவது கடவுள் கட்டளையானல் அதனைப் போற்றி வளர்க்கும் முன்னெச்சரிக்கை யில்லாமல் அவர் (கடவுள்) எதுவும் செய்வாரா?



# மகாத்மாவைப் பற்றி

## கானடா பத்திரிகை

மகாத்மா காந்தியைப் பற்றி "குளோப்" என்ற ஒரு கானடாப் பத்திரிகையில் ஜெ. பி. எம். என்பவர் எழுதுவதாவது :—

மகாத்மா காந்தியிடம் பழமையும் புதுமையுமான இயற்கைகள் உண்டு. அந்த அற்புத மனிதர் தேசிய சமூக மாற்றங்களை உண்டு பண்ணவும் தாழ்த்தப்பட்டவர்களை உயர்த்தவுமாக மூன்று வாரம் உண்ணுவிரத மிருந்து கஷ்டப்பட்டார். ஒரு பகைவனை அவமானப் படுத்துவதற்காகப் பட்டினி இருப்பதென்பது ஒரு பழையகால வழக்கமாகும். ஆங்கிலோ—சாக்ஸன் ஜாதியார்கள் முற்காலங்களில் ஒரு மனிதன் ஒரு தவறைச் செய்துவிட்டால் அத்தவறு சீர்ப்படுத்தப்படுவது வரையிலும் தப்பிதம் செய்தவனின் வாயிற்படியில் உண்ணுவிரத மிருப்பது வழக்கம். காந்திஜீ இதே கருத்துக்கொண்டு தான் பட்டினி கிடந்தார்; ஆனாலும் அவருடைய கக்ஷியை அதிகமாகப் பட்டினி மூலம் விளம்பரப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற ஆசையிருந்தது. இந்தப் புது யுகத்தில் விளம்பரப் படுத்துவது தான் ஓர் ஆயுதம். இந்த விஷயம் காந்திஜீக்குத் தெரியுமென்பதில் ஐயமில்லை. வெளிப்படையாக அதனையே தேடுகின்ருர். அவருடைய வாழ்க்கையில் இதற்கான உதாரணங்கள் பலவற்றைக் காணலாம்; ஆனல் அவர் ஓர் பெரிய ஞானி.

இரண்டு வருடங்கட்கு முன்பு அவர் வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றிருந்தபோது உலகம் முழுவதிலும் ரேடியோ இயந்திரங்கள் பல தொடர்ச்சியாக வைக்கப்பட்டிருந்தன. சுமார் 10 நிமிஷமோ என்னமோ உலகிலுள்ளாரை யெல்லாம் தன் பிரசங்கம் கேட்போராக ஆக்கிவிட்டார். வட்டமேஜை மகாநாட்டில் அவர் பேசத் தொடங்குவதற்குச் சற்று முன்னர் லண்டன் பிராட்காஸ்டிங் ஆபீசில் ஒருவர் ஓடி வந்து "மிஸ்டர் காந்தி இப்போது பேசுவார்" என்ருர். உடன் பரந்தது ஒரு பெரிய அமைதி. சுமார் ஒரு நிமிஷ நேரம் அம் மௌனம் நிலவிற்று. பிறகு ஸ்ரீமதி ஸ்லேட் மைக்ரோபோனின் அண்டைதோன்றி "காந்திஜீ சாயுங்கால உணவை அருந்திக்கொண்டிருக்கிருர்; இப்போது அவரை யாரும் தொந்தரவு செய்யக்கூடாது; ஆனல் சில நிமிஷங்கட்குள் வந்து விடுவார்" என்று சொன்னர். அப்பால் சற்றுநேர மௌனத்தின்பின் காந்திஜீ பேசினர்.

அந்த மௌனம் சந்தேகமற ஒரு



ஏழை மாணவிகள் சம்பளக் குறைவைச் சென்னை சர்க்கார் நீக்கியிருப்பதைக் கண்டிக்கும் பொருட்டு டாக்டர் முத்துலட்சுமி அவர்கள் தலைமையில் மைலாப்பூர் ஹிந்து ஹைஸ்கூலில் ஓர் கூட்டம் நடத்தப்பட்டது. படத்தில் தலைவரோடு ஸ்ரீமதி விசாலாட்சி அம்மாள், ஸ்ரீமதி யாகூப் ஹுசேன் ஸ்ரீமதி ஜானகி முதலியோர் காணப்படுகின்றனர்.

P.P.B.

விதப் புறப் பூச்சாம். ஒரு மனிதன் ஏதோ திடீரென்று வந்த அசந்தர்ப்பத்தால் உலகம் முழுவதையும் காக்க வைத்து விடவில்லை. நமக்கு மனிதர்களோடு ஒரு வேலை யிருக்குமானல் அதனை உடன்செய்து முடித்து விடுகிருேம். ஒரு "பகட்டான" வருகையைக் காண்பிக்க விரும்பும் போதுதான் காக்கவைத்துப் பிந்தி வருகிருேம்.

மற்றொரு சமயம் காந்திஜீ காண்பித்த வேருெரு ஏமாற்றைக் குறிப்பிட வேண்டியதாகும். அவர் லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்குப் புறப்படவிருந்தபோது தம் பிரயாணத்தைக் கடைசி நேரம் வரையிலும் கடத்திக் கொண்டே யிருந்தார். முடிவில் திடீரென இடுப்பு வேஷ்டியையும் ஆட்டையும் பிடித்துக்கொண்டு ஹிமாலயன் சாரல் வழியாக ரயிலுக்கு ஓடினர்.

இந்த மனிதரின் பதில்கள் எல்லாம் பத்திரிகைகளின் முதல் பக்கத்தில் இடம்பெற்று விடுகின்றன. ஒருதரம் "நீங்கள் சார்லி சாப்லினைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்" என்று வினவியபோது "சார்லி சாப்லின் என்பவர் யார்" என்று கேள்வி கேட்டார். சார்லி சாப்லினைத் தெரியாது என்று சொல்வது நம்ப முடியாது. விசேஷமாகவும் ஒரு பெரிய தேசியத் தலைவர், தலை நகரப் பத்திரிகைகளைப் படிப்பவர் தெரியாதென்ருல் பெரிய ஆச்சரியமே. இந்த காந்திஜீயின் பதில் பத்திரிகைகளிலெல்லாம் முதல் பக்கத்தில் போடப்பட்டது.

அவர் செய்து கொள்ளும் விளம்பர மாயங்களிலெல்லாம் மிகப்பெரிது பட்டினி விரதம்தான். ஒரு மனிதன் அவ்விரதத்தை விரும்பினலும் விரும்பாவிடினும் காந்தி சாப்பிட்டாரா என்று அறிவதில் அவனுக்கு ஒரு பெரிய ஆசை இல்லாமலிருப்பதில்லை. அவர் பட்டினி யிருந்தபோது தினந்தினம் அது ஓர் ஆச்சரியச் செய்தியா யிருந்தது. "காந்திஜீயின் நாடி தளர்ந்துவிட்டது" என்ற செய்தி நியூயார்க் பத்திரிகைக் கட்டிடத்தில் 6 அடி நீளமுள்ள மின்சார எழுத்துக்களால் எழுதப்பட்டது. "காந்திஜீ இன்று உணவருந்தவில்லை" என்றால் உடனே அந்த வர்த்தமானம் இந்தியன் மகா சமுத்திரத்தைக் கடந்து ஐரோப்பாவை எட்டி அமெரிக்கா முழுதும் பரந்துவிடுகிறது. உலகில் சாப்பிடாம லிருப்பதனல் எவராலும் இவ்வளவு பெரிய பிரசித்தியை அடைந்துவிட முடியாது. இந்தச்சங்கதி காந்திஜீக்குத் தெரியும். அவர் யாரோ ஒரு பகைவனை மடக்குவதற்காகப் பட்டினி யிருப்பதில்லை. மக்களின் மனதில் தம் விஷயம் பதியும் பொருட்டே உணவை மறுக்கிறார்.

இவ்வாறு விளம்பரம் செய்து கொள்ளும் குணம் அவருடைய ஞானி போன்ற தோற்றத்தைப் பாதித்துவிடுகிறதா? இல்லை—காந்திஜீ சந்தேகமற ஓர் முனியே. அவருடைய இருதயம் விசேஷத்தன்மை வாய்ந்தது. மூன்று வாரம் பட்டினி யிருப்பதென்றால் மற்றவர்கள் இறந்து போவது நிச்சயம். ஆனல், காந்திஜீ—ஒரு உலர்ந்த சரீரமுடையவர்—வெற்றிகரமாக வெளியே வந்துவிட்டார். இதனல் காந்திஜீக்கு ஒரு நல்ல மனே சக்தியும் ஒழுக்க முறையும் உண்டென்று நினைக்கலாம். அவர் உண்ணு விரதமாரம்பித்த பொழுது தமக்கு இறக்கவேண்டுமென்ற உத்தேசமில்லை யென்றார். ஆதல்பற்றியே அவர் உயிர் நீங்கவில்லை. அவரே அவருடைய உயிருக்கு எஜமான்; பாக்கியத்தின் அதிகாரி. அப்படிப்பட்ட ஒரு மனிதர் 'பகட்டு' உடையவராக விருக்கலாகாதா?

இக்கூற்று முன்னுக்குப்பின் முரண் போல் தோற்றலாம்; ஆனல் உண்மையப்படியல்ல. காந்திஜீயின் இயற்கை வேறு மாதிரியானதாகும். காந்திஜீ மேனாட்டிலிருந்தே விளம்பரம் செய்யும் குணத்தைக் கற்றுக்கொண்டார்.

இனி காந்திஜீயின் உண்ணு விரதத்தின் பயன் என்னவென்று பார்ப்போம். பலர் காந்திஜீ ஜாதி வித்யாசத்தோடு போராடுகின்றாரென்று நினைக்கிறார்கள்; அது தவறு. அவருக்கு ஜாதிப் பாகுபாட்டில் நம்பிக்கை யுண்டு. அவர் வாரிசுக்குணம் ஒவ்வொருவனிடமு முண்டு என்று நம்புகின்றார்; எனவே வர்ண முறையைப் பின்பற்ற வேண்டுமென்கிறார். ஆனல் அவருடைய போராட்டம் ஹிந்துக்களால் உரிமை பறிக்கப்பட்டு தீண்டாதார் என்று கருதப்படுகின்ற ஒரு வகுப்பாரை அழுத்துவதற்கெதிராகவே செலுத்தப்படுகிறது.

இந்திய வழக்கம் மிகக் கடுமையானது. காந்திஜீயின் பிரசாரத்தால் உடைத்துவிட முடியாதபடி கடினமா யிருக்கிறது.





## பிரிட்டிஷ்காரருக்கு உபதேசம்

"காண்டம்பரரி ரிவ்யூ" வென்பதில் மிஸ்டர் எச். எஸ். ஆர். போலாக் எழுதுவதாவது:—

ஜாதி வித்யாசத்தையும் தீண்டாமையையும் நாம் வெறுக்கின்றோமென்பது உண்மையானல்; இந்தியர்களைத் தாழ்ந்தவர்கள் என்றும் நாம் ஆள்வோர்; அவர்கள் அடிமைகள் என்றும் நினையா திருக்க வேண்டுவது கடமையல்லவா? சாதாரணமாக இருவர்கள் காற்றுப் புகாத அறைகளில் உட்கார்ந்துகொண்டு ஒருவரின் அபிப்பிராயத்தை மற்றவர் அறியா திருப்பதானல், நாளடைவில் நம்பிக்கை குறைந்துபோம்; சந்தேகம் அதிகரிக்கும்; நோக்கங்களும் மாறிப் போகும்; கடைசியாகத் தப்பான விஷயங்கள் தலைகாட்டத் தொடங்கிவிடும். சந்தேகத்தி லிருந்துதான் வெறுப்பும் பகைமையும் தோற்றுகின்றன. சமூக வெறுப்பு நாளடைவில் நாடு முழுது பரந்து விடக்கூடிய ஒருவித வியாதி என்பதை நாம் உணரல் வேண்டும்.

நாம் கிருஸ்துவின் உருவத்தையும் கிருஸ்து மதத்தின் அழகையும் பேசிப் பெரிய லட்சிய மிருப்பதாகக் கூறி வருகிறோம். ஆனல், இந்தியாவில் சர்க்கார் உத்தியோகஸ்தரிடம் சேர்ந்து கொண்டு கிறிஸ்துமத தர்மத்தை மறந்திருப்பதைக் காண்கின்றேன். சில கால் பிரிட்டிஷ் மக்களிடமும் கூட அவ்வாறு தர்மமில்லாது போவதுண்டு. 1917-ல் நடைபெற்ற ஒரு சம்பவம் எனக்கு ஞாபகம் வருகிறது. நான் தொழிலாளர் நிலைமையை எடுத்துக் கூறியபோது ஒரு "பிஷப்" தலையசைத்தார்; ஆனல், மறுநாள் ஒரு கூட்டத்தில் பேசும்படி கேட்டுக் கொண்டபோது மறுத்துவிட்டார்.

## மேனாட்டுக் கீழ் நாட்டு மத போதகர்.

சரித்திரத்தைப் படித்தோமானல் நம் நாடு ஒரு போதாவது அழிவு வேலை செய்யும் படைகளையும் போர் வீரர்களையும் வெளி நாடுகட்கு அனுப்பவில்லை என்று தெரிந்து கொள்வோம். நம் பூர்வீகர் சேனைகட்குப் பதிலாகப் பிக்ஷுக்களையும், சந்நியாசிகளையும் வெளிநாடுகட்கு அனுப்பி அன்பையும் அமைதியையும் போதித்தார்கள். இவர்கட்குப் பக்க பலமாக ராணுவம் அனுப்பப்படவில்லை. அவர்கள் போதிக்கும் தர்மங்களே அவர்கட்கு அரண்களாயிருந்தன.

இத்தகைய முறைகளினல் தான் இந்திய மதமும் படிப்பும் இலங்கை, பர்மா, சீயம், மலாயா, இந்தொனேஷியா, இந்தோ சீனு, அப்கானிஸ்தானம், துருக்கிஸ்தானம், சீனு, கொரியா, ஜப்பான் ஆகிய தேசங்கட்குப்போயின. இந்திய நாகரிகம் எங்கெங்கு போயினவோ அந்தத் தேசங்களெல்லாம் உயர்ந்தன. மேலும் இந்தியா மேனாட்டாரைப் போல தாம் சென்ற தேசங்களின் அறிவுச் செல்வத்தை அழித்துவிடாது அந்நாட்டோடு சேர்ந்து ஒழுகி நயந்திருந்தது. சீனு தேசம் இந்தியாவிலிருந்து பெற்ற நன்மைக்கு என்றும் கடமைப்பட்டுள்ளதாம்.

இன்று இந்தியா தன் பழைய நாகரிகத்தைப் பரப்ப முயல்வது நியாயமல்லவா?

—பிரபுத்த பாரதம்.






This page is in colour

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd.,
at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

